உ

சிவமயம்.

# கண்ணப்பர் கலம்பகம்.





நூலாசிரியர் :

வி. துரைசாமி முதலியார்.

புதுவைக் கவர்ன்மெண்ட் கல்விச்சாலைத் தமிழ்ப்பண்டிதர்.

( தமிழ் மகவுப் பத்திராசிரியர். )



[illegible] பிரெஸில் பதிப்பிக்கப்பட்டது. [illegible]

இப்புத்தகத்திலடங்கியவை:

---



---

# நூன்முகம்.

அநாதிமலமுத்தசித்துருவாய சிவபிரானது திருவருளையன்பி னானே யடைந்துய்ந்த அடியார்கட்கு அடிமை செய்வதே, பவக் கடல் கடந்து முத்தியங்கரையி லேறுதற் கேற்ற பாதையாமென்று பண்புடைப் பெரியோர்கள் பகர்ந்துள்ளார்கள். இது,

"தலையா னடந்து முத்திநிலஞ் சார்த லொக்கும் பசுதன்மங்
கலையார் கரத்தான் சிவசரிதை காலா னடத்தாம் பறந்தடைத
றலையே யொக்குஞ் சிவபூசை தொண்டர் பூசை யாலடைதன்
மலைபாவாயு வேகத்தான் மனோவேகத்தான் ஞானநிலை." எனவும்,

"பொடிகொண் மேனியன் பூசையி னும்மவன் - அடியர்பூசை யதிக மதிகமே." எனவும் வருவனவற்றால் மயலற விளங்குமென்க. தம்பிரான் றோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளருளிய திருத் தொண்டத் தொகையின் உண்மைக் கருத்தையு முய்த்துணர்க.

இத்தகைய தொண்டர் தொண்டிற்செய் துய்வான் கருதிய சிறு நாயேன் சிந்தையின்கண்ணே கண்ணப்பநாயனார் பாதமலரிற் கலந் துய்வாமென்றோரெண்ண மினிதுதிப்ப, அதனாற் **கண்ணப்பர் கலம்பகம், கண்ணப்பர் பதிகம்** என்னுந் துதிகளை இயற்றியுள் ளேன். அத்துதிகளைக் கேட்ட அன்பர் சிலர் கண்ணப்பர் கலம்பகத்தை அச்சிட்டு வெளியிடவேண்டுமென்று பன்முறை பணிக்க, அவ்வாறு ஆரம்பித்து முதலிற் கலம்பகம் அச்சிட்டானபின், அது கற்பார்க்கு இன்றியமையாது வேண்டப்படும் "அன்புங் கண்ணப்பரும்" என் னும் விஷயமும், கண்ணப்பரைக் குறித்த வேறு சில பாடல்களும் இப்பதிப்பிற் சேர்த்துள்ளேன்.

இக்கலம்பகத்திற்குக் குறிப்புரையொன் றெழுதி யச்சிடத் தொடங்குங்கால் நூன்முழுதும் விரிவுரையாகவே செய்து அச்சிடு வது அனைவர்க்கும் பயன்படுமென்று பகர்ந்தனர் பலர். அவ்வாறு அகலவுரையொன் றினியெழுதி யச்சிடற் கெண்ணியே குறிப்புரை யைத் தற்போது அச்சிடவில்லை.

இங்ஙனமாய தொண்டர் தொண்டில் எனது பொல்லா மனமும் புகுமா றருளிய எம்மிறைவனாகிய திருக்காளத்தியப்பரது திருவரு ளைப் பன்முறையானும் பாங்குறப் பரவிப் பழிகெடுமாறே வழிபடு கின்றேன்.

புதுவை
உருத்திரோற்காரி ௵
சித்திரை மீ.

இங்ஙனம்
வீ. துரைசாமி.

# சிறப்புக்கவிகள்.

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயம்,

## ஸ்ரீலஸ்ரீ. சிவசண்முக மெய்ஞ்ஞானதேசிகமூர்த்திகள்

அருளிய விருத்தம்.

மதியணி சடில வானவன் பத்தி வகையுளி பெற்றகண் ணப்பர்,
துதியுயர் செய்யுள் வனப்பெலா மிளிர்ந்து துதைந்திடு கலம்பகந்
தன்னைச், சிதைவக லடியா ரினத்தொடு கூடிச் சிவன்றரு மின்புற
நினைப்போன், புதுவையில் வதியு நற்றுரை சாமிப் புலவன்செய்
துய்ந்தன னன்றே.

சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பிரதம பண்டிதராகிய
மகா மகோபாத்தியாயர்,

## உ. வே. சாமிநாதஐயரவர்கள் கூறிய விருத்தம்.

பூமேவுபுதுவைநகரெழிற்றுரைசாமிப்பெயர்கொள்புலவனொற்றிக்
கோமேவு காளத்தி நாயகனன் பேவடிவாக்கொண்டி லங்கு
பாமேவு கண்ணப்ப வடிகள்கலம் பகநூலைப் பகர்ந்துய்ந் தானல்
தூமேவுதொண்டர்பெருமையையறிந்தபெரியர்மகிழ்தூங்கமாதோ.

சென்னைஇந்துதியலாஜிகல்ஸ்கூல்தமிழ்ப்பண்டிதர்,

## கோ. வடிவேலுசெட்டியார் அவர்கள் கூறிய

நிலைமண்டில வாசிரியப்பா.

கண்ணு நிலையருட் கண்ணு மேலார்ந்து
மண்ணு நிலைமை வாரா தகற்றத்
தண்ணார் சடிலத் தற்பரன் சங்கரன்
விண்ணுஞ் சீரார் வியன்கா ளத்திப்
பண்ணார் மொழியாள் பாகன் பாத
முண்ணு டன்பா லுவப்பா யடைந்த
திண்ணா னென்னுந் திருப்பெயர் வாய்ந்த
கண்ணப் பர்தங் கலம்பக மென்ன
வண்ணமா மொருநூல் வளமார் புதுவை
யண்ணா லார்துரை சாமி யன்பன்
பண்ணய மெல்லாம் பண்பா யமைத்தின்
கெண்ணுமா றெவரு மியற்றியோ னினமே.

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம் இராமநாதவித்யாலயம்,
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்,

## நவநீதகிருஷ்ண பாரதியவர்கள் கூறிய கலிவிருத்தம்.

அடைக்க லம்பக வாதர வொன்றின
னடைக்க லப்பக வாதர வொன்றின
னடைக்க லப்பக வாணனை நாடிய
நடைக்க லம்பக வாணரு நண்ணிருன்.

தமிழ்ப் பிரமருத்திராசிரியராகிய மறைத்திருவன்

**சாமி, விருதை - சிவஞானயோகிகளவர்களியற்றிய**

நிலைமண்டிலவாசிரியப்பா.

அலகில் கால முலகெ லாமுணர்ந்
தோதற் கரிய வாதி யகண்டனை
அன்பாற் பிணித்துத் தன்பாற் கண்பெறச்
செய்த திண்ணனு மெய்கொ ளண்ணல்
பரிவல னுயரன் பணிசெய்தாட் கொண்ட
வாதவூ ரடிக ளோது தமிழிற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பின் றென்று
கண்ணிப் புகழ்ந்த கண்ணப்ப தேவர்
அன்பமிழ் தக்கட லின்பிற் பருகி
புண்மை யடிய ருளிற் றா லான்றி
மெய்ப்பொரு ளுண்மை விளங்குற மின்னி
உயிருல கினைறொறு மயலற விடுத்து
வெந்துயர்ப் பிறவி வெப்ப மொழிய
முற்று மின்ப நற்றீம் வெள்ளம்
எங்கும் பெருகிப் பொங்கிப் பொலியக்
களிப்புத் தண்கால் கலித்து வீச
உழுவலொ டருளுமி ழும்பல வீழுகுங்
கலந்த கலப்பக நான்மறை பெய்தருள்
நிரப்பினன் புதுவை நீணன் னகர்வாழ்
துரைச்சா மிப்பேர்த் தூயமா முகிலே.

# கண்ணப்பர் கலம்பகச் செய்யுள்

## முதற்குறிப்பு அகராதி.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கண்ணப்பர் கலம்பகம்.

## பாயிரம்.

காப்பு.

### ஐஞ்சந்தி விநாயகர் துதி.

கட்டளைக்கலித்துறை.

பூமலி சீர்த்திருக் காளத்தி வாழும் புனிதருக்கு
பாமலி யூன்றரு கண்ணப்பர் மீது வளர்துதியா
நாமலி யின்சொற் கலம்பகம் பாட நலந்தருபாற்
றேமலி யஞ்சந்தி யானை முகவன் றிருவடியே. (க)

### திருக்காளத்திநாதர் துதி.

வெண்பா.

கானமுதா வேடரிறை காதலினூ னூட்டமகிழ்ந்
தானமுது வானமுதி னுண்பரனார் - தேனமர்பொற்
பாதகம லங்களுறும் பற்றினார் பற்றாரே
பாதகம லங்களுறும் பற்று. (உ)

### ஞானப்பூங்கோதையம்மையார் துதி.

௸.

வானப்பூங் கோதைமலர் மங்கையர்கள் வந்திறைஞ்சு
ஞானப்பூங் கோதையெனு நாயகிதன் - பானப்பூந்
தாள்களைவார் பற்றார் தாநினைவார் வன்பிறவித்
தாள்களைவார் பற்றார் சகம். (ங)

## முருகக்கடவுள் துதி.

### வெடி.

இன்னான் பிறக்கவருள் செய்யுஞ் சடானனனைத்
தின்னான் பிறவாமே சிந்தித்து - நண்ணுமவர்
காற்கஞ்ச முற்றக் கடைப்பிடிகொண் டாற்பகடேர்
காற்கஞ்ச முற்றக் கடை. (௧)

## சமயாசாரியர்கள் துதி.

### எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அஃறிணை யதனோ டுயர்திணை யெவையு
மாக்கியே யளித்தழித் தருள்வோன்
கஃறனை வில்லாக் கொண்டநம் முக்கட்
கடவுளை பிறரிலை கண்டீர்
சிஃறொழிற் றேவர்க் கறிவருஞ் சிவன்றாள்
சேர்கிலார் பவமறு மெனவே
பஃறமிழ் வேதம் விரித்தரு ணால்வர்
பதங்களை நிதம்பணி குதுமே. (௨)

## திருத்தொண்டர்கள் துதி.

### கொச்சகக்கலிப்பா.

கடாக்களிற்றி னுரிபோர்த்த கண்ணுதலோன் கழல்சேர்ந்து
விடாக்களிகொ டிருத்தொண்டர் விரைமலர்ச்சே வடிவீழ்ந்து
படாக்கலச முலைமடவார் பற்றுமுதற் பற்றெவையு
மடாக்கவினெஞ் சுற்றிருக்கும் வாழ்வுளமேற் றாழ்விலமே. (௩)

## அவையடக்கம்.

### கலி விருத்தம்.

புன்மைசே ரூனையும் புனிதர்க் கூட்டிய
வன்மைசேர் திண்ணனார் மலர்க்க ழற்கியான்
சொன்மைசேர் புன்கவித் தொகைந வின்கவித்
தன்மைசேர்ந் தொளிர்வகை தருவர் தாமரோ. (௪)

## நூல்.

### ஒருபோகு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா

க. சீர்பூத்த தென்கயிலைத் தேவாதி தேவருக்கே
நீர்பூத்த வாயிலிடு நிணமலியூ னுணவூட்டிக்
கண்பறித்துத் திகிரிபெறக் கமலமிடுமா ணுணவொளிர்
கண்பறித்துக் கண்ணிலிடுங் கருணைமிகுங் கவின்காட்டி
முன்னொருக ணப்பியபின் முகத்துதிரங் கண்டயரேன்
இன்னொருக ணுண்டென்ன வேமரப்போ டிடந்திடுங்கால்
விண்ணப்பன் பரவுசடைக் கண்ணப்பன் விரவுறுதற்
கண்ணப்பன் றிருவாக்காற் கண்ணப்ப னாயினையே !

(இது எட்டடித் தரவு.)

க. நலமாருங் காளத்தி நாதாருண் மிகுமொழியா
லுலவாத பேரன்பி னுருவாநின் கரம்பிடித்து
நிலமீது முக்காலு நிற்கவென வுரைததன்ப
வலமாக விருக்கவெனும் வரமருளப் பெற்றனையே !

உ. ஞானமுனி கோசரிக்கு நடபெருமா னுன்பெருமை
தானவிலப் பெறும்பேறு தலைவாநீ பெற்றதலால்
வானவரு மண்ணவரு மற்றவரு முற்றனரோ
கானவர்தங் குலவுவரிக் கடறரோன்று கதிர்மதியே !

௩. சிவமேவு மன்பரெலாஞ் செப்புமெசிழ் நின்சீரை
யவமேவு முலகவர்பா லறியாதா ரியாருளரே
தவமேவு நாகனுக்குந் தத்தைக்குந் தனிமகவாய்
நவமேவும் புகழ்வளர நானிலத்தில வளர்ந்தனையே !

(இவை மூன்று நாலடித் தாழிசைகள்.)

க. இடமொடு துடியொலி படவட விகடொறும்
விடலரு மறையுமுழ மிகவடல் கருதினை ;

உ. கொலைபுரி யிறவுளர் குழுவள விலைபல
கிலையுல கமுநிறை துதிசெயு நிலையினை ;

௩. மனனொடு மொழியுட லெனுமிவை பலபட
வினவிடை யுலகவ ரியனெறி யுறுகிலை ;

௪. கணமரு விமையவர் கருதரு மிறையடி
கணமகல விலையொரு கதியெனு மதியினை ;

(இவை நான்கு மீரடியராகங்கள்.)

௧. நின்னன்புங் காளத்தி நிமலர்திரு வருளுமொரு
தன்னம்பன் னிடமெவர்க்குத் தாயாகுஞ் சாற்றுமே !

௨. ஆனந்த வடிவர்திரு விழிபுதிர மருட்பெருக்காய்த்
தானங்கு நிகழ்ந்தவகை தரையோர்க்கு முரைபோமோ !

௩. நற்றவமுன் செய்தவையான் ஞாலமிசைக் கோலமிசை
பற்றெவையு மற்றிறைவன் பற்றினையே பற்றினையே !

௪. வாழ்வுடைய விண்ணோர்கள் வணங்குடமற் குளங்குளிர்ந்த
தாழ்வுடையா ரீயன்றித் தலையன்பர் வேறுளரோ !

௫. அன்னையுமத் தனுமபரனை யாவனென வடைந்திருந்த
வன்னையுடபெற் றோரழைக்க வுரையாடா திருந்தனையே !

௬. கற்றன்பு தலைப்படுவோர் கருதுநின தன்பன்றி
மற்றன்பு போற்றுத வண்ணமெலா மறப்பரிதே !

(இவை யாறு மீரடித்தாழிசைகள்)

௧. பத்தி வித்து நீ ;
௨. முத்தி வித்து நீ ;
௩. நித்த வின்பன் நீ ;
௪. வைத்த முன்பன் நீ ;

(இவை நான்கு முச்சீரோரடியம்போதரங்கங்கள்)

௧. மறமிகுத்தனை ;
௨. திறமிகுத்தனை ;
௩. மலிதவத்தினை ;
௪. ஒலிபதத்தினை ;
௫. அறனையுற்றனை ;
௬. அழகுபெற்றனை ;
௭. அமலமேயினை ;
௮. அமர னாயினை.

(இவை எட்டு மிருசீரோரடியம் போதரங்கங்கள்)

எனவாங்கு,

(இது தனிச்சொல்)

மாயிரு ஞாலம் வழுத்து கருங்கதிர்
ஞாயிறு நிகர்த்த நலமலி வடிவினை
மாவரு கான வாழ்க்கையை யாகியுந்
தேவரும் பரவு மேவரு நிலையை

இரவினும் பகலினும் விரவிநிற் பிரியா
முடிவிலாய்ப் பிறந்தேன் முடிவுறுத் திலன்முன்
மலைமேன் மருந்தின் றலைமேல் வருநின்
செருப்புறு துகளா முருப்பெறு கிலனே
வேட்டமே புரியுங் காட்டினின் னடிக்கீழ்ப்
புல்லாய்க் கல்லாய்ப் பொருந்து மிருந்தவம்
புல்லாப் புலையேன் கல்லா நிலையேன்
பத்திக் கடலாய்ப் பரந்த பெருங்குணம்
வைத்துத் திகழு மறவர் தலைவநின்
றிருவுறு செய்கை சிந்தித் துய்ந்தேன்
கருவுறு செய்கை கழிப்பக் கருதி
வந்தடி வணங்கி முந்துறத் தொழுதேன்
காளத்தி யப்பன் கருணையிற் சிறிதே
மூளப் பத்தி முகந்
தாளக் கடனின் னடிமலர் சரணே.

(இது பத்தொன்பதடி நேரிசையாசிரியச்சுரிதகம்.) (க)

வெண்பா.

சரணார் தனுவேந்திச் சார்கங்கு லெல்லா
மரணாக் காத்துறங்கா வண்ணல் - சரணுற்று
லெத்திருக்கு மாறு மியன்முத்திப் பேறுறுமுள்
வைத்திருக்கு மாறு மதி. (உ)

கட்டளைக்கலித்துறை.

பதிவந் தமர்சடைக் காளத்தி யப்பர்க்கு வாய்ந்திடுநன்
மதிவந் தமர்விருப் பாண்மிக வெச்சின் மயங்கவிடுங்
கதிவந் தமர்புகழ்க் கண்ணப்ப ரூட்டுங் கவின்கொளுமூன்
நிதிவந் தடர்மகத் தின்னவி யிற்சுவை நீடியதே. (ங)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

நீடும் வண்புக ழாரு மன்புயர் நீதி நன்பொருளோ
டாடும் வென்றியெ லாம மர்ந்திட லாகு மொண்புவியீர்
பாடு தென்கயி லைச ரன்பினர் பால லர்ந்திடுசீர்
ஈடு கொண்டகி ராத ரின்பத மேயி றைஞ்சிடுமே. (ச)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இறைச்சியு மென்புந் திருமுனே கிடக்க
வெதிர்குறித் தோடிய மறையோ
னுறைப்பொடு மறைந்து நின்றுகண் டுருகு
முண்மையைச் சிறிதுரைத் தருளாய்
கறைக்கள னெங்கண் பணியெனுந் தொண்டர்
கட்டுரை பழுதறு வாறே
நிறைக்கதிர் விழியீ ரடியவர் பெருமை
நிலைத்திடச் செயுங்குண நிதியே. (ரு)

தனிமம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

நிதமி ருந்துயர் மிகவி ருநதபர்
நிலையி னின்றிய லுயர்த வங்கொள
மதிம யங்குல கினர்நி ரந்தர
மருவு கின்றில ரிதுவெவன் வஞ்சனை
அதிசி லபியொ டரவு வெங்கரி
தொழும ரன்றின மகிழ வன்பொடு
பதமி றைஞ்சிநல் விழியி டநதணி
பரவு குன்றவர் பதிப தங்களே. (சு)

ஒன்பதின்சீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்

பதத்துவிர லாணி லாவு மரக்கன்மத மேமி சாது
பதைததுவிழ வேசெய் நாதர்பா
விதததவுண வாக மாணி னிறைச்சியினை யார்வ மேகொ
டெடுத்தளிகி ராத ராஜனை
கதத்தொடுமு லாவி யாளி மதத்தகரு மாவி னோடு
கலக்குபுலி யாதி யேவிவாழ்
விதத்துமிகு கான மேகி மிதித்தடிகொ டாது சூட
விரித்ததவ மேது மேயதே. (எ)

வெண்பா.

மேயதமிழ்ச் சாயலுமை பாகத்து வித்தகர்க்குத்
தூயபுகழ்க் கண்ணப்பர் தொண்டுசெய - நேய
மறைமுனிவன் வேடன் வான்முறையோ வென்றான்
பிறைமுடியோற் கன்பே பெரிது. (அ)

## புயவகுப்பு.

### ஆசிய வண்ண விருத்தம்.

பெரிதமரர் சிந்தனைக் குரியசெயல் கொண்டிடப்
பிரியமொடு சங்கரர்க் குறுசேவலையீன்றின
பிறவியறு நெஞ்சகத் தறிஞர்தின முஞ்சொலிப்
பெருகுதுதி நன்றுரைத் திடுமாலையொன்றின
பிழைகள்புரி வஞ்சகர்க் கிறையளவு நின்றுணப்
பெறலரிதெ னுந்தகைப் பெருவாய்மைதங்கின
பிழிமதுவி ரிநதிடப பொலிவனவ னந்தனிற்
பிணைமலர்வி ளங்குறப் பலசூடிவந்தன (அவ)

திரிமறவர் தங்களுக் கிறைமைகொடி ருநதுவெற்
றியின்மிகுதி றங்கொளற் கிடமாகிருந்தன
திகழ்கலைகள் பன்றிமுற் படுபுலியு மன்றழித்
திடவிடுச ராபிணைத் தெதிரேதுரந்தன
சிறுமழவி லங்குமெய்க் கருவுடைய நொந்தவித்
திறமுளப யங்கெடுத் தருளோடுசென்றன
செறிபழன்மு னந்தனித் தனியுசித மென்றறுத்
திடுபிசிதம் வெநதிடக் கணைபாரவுந்தின (அத)

அரியபுலன் வென்றவர்க் குரியசிவ னன்புமிக்
கமுதுசெய நன்கமைத் திடுமூனமர்ந்தன
அறையுமலை வென்றுறத் திரளெழுமு னித்துளைக்
கருவலிமி குந்துபற் றலர்சாயவிஞ்சின
அமரர்கன வுப்புலப் படவறிவ ருப்பாற்
கமர்வடிவ மின்புறத் தழுவாமகிழ்ந்தன
அலர்விழிமை யமபெருந் தரைநொடியி லன்றடுத்
தடியொடுமி டந்தணைத் தெழுசீர்பிறங்கின (அதே)

கரியமணி யென்றிடத் திகழுருநி றங்கொளக்
கரியின்வரு தந்தமக் கணிமாலைகொண்டன
கலகமற வென்கவித் தொடையினொடு குன்றியைக்
கவினுறவ ணிநதுமிக் கெழிலோடிலங்கின
கருதுமா னன்பநிற் கவினியெண முன்சொலிக்
கணையொடுக ரப்பிடித் திடுபேறுகண்டன
கரியனய னென்றிவர்க் கரியபத மொன்றுமக்
கனவனச ரன்புகழ்த் திருவாழ்புயங்களே. (க)

### சிலேடை - கட்டளைக்கலித்துறை.

புயற்கந் தரவரை யுற்றுக் கிளைவிட்டுப் போகுயர்வால்
இயற்கண் மலரை யிறையிடஞ் சேரெழி லாற்கனிவாய்
நயப்புள் ளூறலா லிசையாரி சேர்தலி னூற்றருக்கள்
உயப்பெறு திண்ண னெனத்தென் கயிலையி லுற்றுளவே. (க0)

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உள்ளம் விழைந்து வனமேவி
யுற்ற கேழற் றசையரிந்தே
யோங்கு மெரியிற் காய்ச்சியுமு
துணர்வாய்ப் பாகஞ் செய்தூட்ட
மெள்ள நஞ்சுண் டறிபரர்நும்
விதத்தி லானின் பவைகண்டு
விரவு மனயர் தமைவிழுங்கி
விடாது பிள்ளை யூனுணவுங்
கள்ள மாக விரதர்நீர்
காட்டு நெறிநன் றுயிறமே
கமல மலரோன் படைத்த கடற்
புடவி மனிதர் கணத்தொன்றும்
எள்ளப் படுத லில்லைதுணை
யெல்லாச் சாதி தமக்குமுள
வென்று மதிஞ ருரைசெய்ப
வெயினர் குலம்வந் துதித்தீரே. (கக)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உதிவரு மதிபணிந்த தென்கயிலை
நாதருள முவப்ப நீநின்
கதிர்செறிகண் மணியளித்த கருத்தானந்
தொண்டரிடங் கனிவு காட்டின்
எதுவுமுற லாமெனவே யியற்பகையார்
பெண்மணியை யிரந்தா ரம்மா
கதிதருபொன் முகரிநீர் வாய்கொடான்
சிரத்துமிழ்ந்து களிக்குங் கோவே. (கஉ)

### கலித்தாழிசை.

கோலமிகுங் காளத்திக் கோவமர்கண் ணப்பனார்
ஞாலமிசை வேடர்குல நண்ணினர்கா ணம்மானை
ஞாலமிசை வேடர்குல நண்ணினரே யாமாயிற்
சீலமான் பூசைசெயத் தேர்ந்ததெவ்வா றம்மானை
செய்ததுமுன் பார்த்தன்பாற் செய்முறைகா ணம்மானை. (கங)

### மடக்கு.

### கோச்சகக்கலிப்பா.

யானடுத்த பாணியரை மலர்வேணிப் பாணியரை
ஊனடுத்த வுணவருத்தி யுடனினிதா வுணவருத்திக்
கானடுத்த வனசரரே கடிவிசைகொள் வனசரரே
வானடுத்த வுறுதவரே மன்காத்த வுறுதவரே, (கச)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

உற்றபெ ருந்துயர் முற்றுமொ ழிந்திட
வுத்தம வன்பர்கள் புகழ்வார்கள்
கற்றவ ருப்பொரு ளெத்தனை யும்பல
கட்டுபு வந்திடு கவிவாணர்
பற்றிடு கின்றனர் நற்றவ முந்திப
பற்பல நன்பிற வியிலேசெய்
செற்றமி லின்பர்க ணப்பர்தி ருந்தடி
திப்பிய மொன்றிய செயலாலே. (கரு)

## மேகவிடுதூது.

### வெண்பா.

செய்யவசி யம்புவின்மின் சேர்ந்தணியா ளான்பரவிப்
பெய்புமுகில் காடிணர்போற் பெட்புறுவீர் - கைதொழுவேம்
கான்வேட்ட மாடுமவர் கான்மலர்த்தார்க் கெங்களிள
மான்வேட்ட வாறுரைமின் மற்று. (கசு)

### இரங்கல் - தாழிசை.

மற்றோர் பற்றி லாமெலாம் வந்து வந்து வந்தனை
 மருவு கின்ற கைலைவாழ் வாத னன்பர் சவரர்கோன்
உற்ற மால்வ ரைக்கணை யுறையு மன்ப ரருளிலார்
 ஓது மாது வன்றுய ருறுதல் கண்ட றிந்திலார்
பற்று நீடு பேடைகாள் பலவ ளர்ந்த வோடைகாள்
 பாடு கண்ட னீழலே தோடு கொண்ட சூழலே
அற்ற மேவு வாரியே யருகி ருந்த சேரியே
 அலர்மி குந்த புன்னையே யரிவை செய்வ தென்னையே. (௧௭)

### பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐயநின் செறிந்த சுரிமயிர் நிமிர
 வார்த்திலைக் கண்ணியும் பீலி
யதனொடு குறிஞ்சி வெட்சியா தியபூ
 வணிந்துநெற் றியின்முருந் திடையே
செய்யகுன் றிகள்சேர் மயிர்க்கயி றார்த்துச்
 செவிவளைத் தோடுறக் கவடி
திகழ்கள மக்கு வடங்கரிக் கோட்டிற்
 செறிமணி மாலைகள் சேர்த்தி
மொய்யுறு வலயந் தொடிகரச் செறிகை
 முதுபுலி யதளிடை யுறவே
மொழியுடை தோலுஞ் சுரிகையு மருவ
 முனைகழற் காற்செருப் பணிந்து
பொய்யிலாப் புகழ்சேர் வனசரா திபநீ
 பொருவரு வேட்டையிற் கானம்
புகுமிது கோலந் தகநினைந் தெளியேன்
 புந்தியு ளைந்துபோற் றுவனே. (௧௮)

### கூதிர் - கலித்துறை.

போற்றரி தாய நீர்த்துளி யோடே புகுவாடைக்
காற்றல ரணிங் காவிப டுங்கே டறியாரோ
சாற்றிய வேடர் தாங்கள்மு னஞ்செய் தவமெல்லாம்
வீற்றுரு வெய்தி மேவிய தென்ன மிளிர்வேலோரே, (௧௯)

## மடக்கு.
### கட்டளைக்கலிப்பா.

மினிரு மேனி பொடிபட வேடனை
விழித்த வீசர் விரும்பிய வேடனை
பனிய நன்மனத் துன்னிய செல்வமே
படைய வொன்றி வழிகலொடு செல்வமே
கனிய தற்றுயி ரேகுமக் காலையே
கருத வுற்றுக் கணப்பனற் காலையே
தெளிவு டன்றுதி செய்யப் பணியதே
சேர நெஞ்சமிங் குய்யப் பணியதே. (உ0)

### தலைவன் வினாதல் - கட்டளைக்கலித்துறை.

பணிவார் பிறவி யறுப்பார்க் கடிமை பயிலுமெங்கள்
மணிவார் கிராதர் வரைமா னனையீர் வயங்குமிடை
யணிவார் கலையொன்று கண்டது ண்டோவென வஃதறையீர்
நணிவார் பெயருறை யிருறை யிரிவ ணன்னெறியே. (உக)

### நேரிசையாசிரியப்பா.

(உயிர்வருக்கமோனை.)

நன்கா ளூர்சேர் தென்கயி லாயம்
ஈரடிய வேடர் பீடுறு தலைவர்
நிறையு மன்பினர் குறையா மொய்ம்பினர்
நீர்மை மிகுந்த பார்வை யிடந்தவர்
நுண்ணுணர் விலலார் நண்ணரு மடிகள்
நூற்றுறை போய வீற்றுயர் பெரியோர்
நெக்குநெஞ் சுருகப் புக்கிறைஞ் சிடுபவர்
நேரா ரோராப் போரச் சீரார்
நைவினை யின்றிக் கைவினை வல்லார்
நொடிவரை யானு ரடிமற வாதவர்
நோவறி யாத தேவரு மானவர்
நௌவெனப் பிறவிப் பௌவங் கடத்து
மவரடி. நாடொறு மடைது
மவலக் கவலை யறுத்திடற் பொருட்டே. (உஉ)

## மறம்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொருண்மிகு மன்னன் றிருமுகங் கொண்டு
புதுமையின் வந்தது தாகேள்
அருள்காசி லாய வேடருக் கூன்முன்
அரித்தவெம் மறவர சொருவர்
இருளற விருக்கப் பிறவர சருக்கிங்
கெமதுபா வையைத்தர வியைவோம்
மருளுநின் னரசு துணையறை வேய்பின்
மருவலர மகல்கவீ டீண்டே. (உ.ங)

### வஞ்சி விருத்தம்.

மீனில் வேடன்மெய் வெவ்வழல்
மூள வேவிழி முக்கணர்
ஆள டைந்தநி னருவிழி
கோள டைந்துகொள் கிற்பதே. (உ.ச)

### வெளிவிருத்தம்

பதும மலர்க்கண் மூன்னொன் றளித்தார் பாரீரே
சதுமென மற்றோர் கண்ணுமி டந்தார் பாரீரே
இதுபொரு ளன்றெந் திண்ணர்செ யற்கே பாரீரே
விதுமுடி யோர்க்குயிர் வேண்டினு மீவார் பாரீரே. (உ.ரு)

### இளவேனில் - தரவு கொச்சகம்.

பார்போற்றுந் திண்ணர் பயிறென் கயிலேதனி
லேர்போற்று மாய ரிசைக்குழல்கேட் டாகிரைசேர்
கார்போற் றிடுமாலை நான்வருந்தி யுறத்தலைவர்
வார்போற் றிளவேனில் வந்திடவும் வாராரே. (உ.சு)

## சித்து.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வாய்க்கலச மஞ்சனநீ ராட்டும் வள்ளல்
வனசரர்கோன் புகழ்கூறுஞ் சித்தர் யாமே
தாய்ப்பரமன் கைச்சிலைமுன் கனக மாக்கித்
தோன்றிருப்பு மலைவெள்ளி தூலங்க வைத்தோம்

பேய்க்கடவு ளோர்நாட்டை யீழ நாடாப்
பொருத்தினேங் கஞ்சமபொன் புணர்வித் திட்டோம்
வாய்ததமருந் திலைபசிக்குக் கூழ்வா ரப்பா
வாழ்பூனையு பாரைமிகும வகைசெய்வோமே (உஎ)

இரங்கல் - தாழிசை.

செய்ய மேனிவெ ணீற ணிந்தவர்
சேவ டிக்கமை தொண்டராந்
திண்ண னார்திரு நாட்டி லெந்திரு
மாது கைகருரு கேயிழந்
துய்ய விட்டிடு குருகு நாடின
னூற மெய்ச்சுக முற்றிலான்
உமைசெய கைசுக நசினுளன
முன்னம விட்டன முனனிருள்
நைய பாரன்மு னெய்யும் வாசிலை
நானெ விதத்திட நாணுறு
நாம மேயுள மேவி யன்பர்த
காம மேமற வாளியள்
மெய்ய வதைதகள் வெய்ய கானக
மேகி னுநண ரார்கொலோ
விலகி யாருயிர் போகி லோர்முறை
மீட்குமவண்ணமு மொன் றுமோ. (உஅ)

ஆசிரியத்துறை.

ஒண்மணிநேர் கண்ணப்பா வறறியவன் பெறுந்தீப முயர்காளத்திக்
கண்மணிநேர் கண்டெனுங் கோல்கொண்டு கோசரியார் கருத்திற்
விண்மணியின் மிக்கதென வன்பருளத் திருள்வீட்டித் [தாண்ட
தண்மணியின் கதிருமிழந்து பொன்றாது நின்றொளிர்சீர் தனைமேவிற
[ருல். (உகூ)

தழை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மேவித் தழையே கைக்கொண்டு மெல்ல வந்திவ் வனமுற்றே
ஆவித் தழையே மிகநல்ல வழகாங் கொண்மி னெனக்கூறிக்
கூவித் தழையா வுளமுருகிக் குரிசி லொருவர் குலைவுற்றார்
பாவித் தழையா விடிலென்னே படும்பா டறியேன் பாவாயே. (௩0)

### வெண்பா.

பாவியல்சீர்த் திண்ணர் பகழித் தலைபட்ட
மாவிலங்காய் முன்னமே வந்திலமே - தீவினையாற்
பெற்றோம் பிறவிபல பின்பவர்நற் றாள்சேர்ந்தோம்
அற்றோம் பிறர்பா லடைவு (௩௧)

## கிள்ளைவிடுதூது.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

அடையலர் முப்புர மெரிநொடி யிறபொடி படையந கைத்தவராம்
விடையவர் பெசசுறு மிறவுளர் கடகிறை விறன்மிகு மறபுருவார்
தொடையமை பொறபுய வலியிசை கற்றுயர் சுருணைமு டைசசகமே
நடையன மொததவனுரையன மறறிவணலிவதவர்க்குரையே (௩௨)

## கார்கண்டுபாகனொடுகழறல்.

### கட்டளைக்கலித்துறை

உரைக்கின்ற நாள்களை யாறிறபி ரானடி யுற்றதிண்ணர்
வரைக்கண் மணித்தேர் விடுபவல வெவிநத வானமுகிலகள்
திரைக்கட லுண்டெழுந தார்த்திடித தேவாள செறிபவிடடு
கிரைக்கினற வயபெய் தரினநத யானுயிர் நிறபரிதே. (௩௩)

## இரங்கல்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அரிமதர் மழைக்க ணரிவையீர் பரம
　　னனபர்கண் ணப்பர்வாழ் வரைமேல்
உரியநந் துணைவ ருணைபபிரி கில்லேன்
　　பிரியினு முயிர்தரி யேனென
பெரியதோ ருரைசொற் றிடுபொழு திளமான்
　　பிணைகளு மிணைபயின் மயிலும்
வரியதே னினமு மினியமாங் குயிலும்
　　வரைகளு முளமன முளதே. (௩௪)

### இரட்டை-அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உள்ளமன் புருவாய வாதவூர்ப போதயா
　　ரொளிபணி புரைப்பெருமையார்
உப்மன்னை யொபபதோ ரன்பின்மை கண்டபின்
　　உடையவன் கருணையுருவாம்

வள்ளலெற் கருளிவா வென்றுனெ னப்புகழ
வாய்ந்ததலை யன்பானீர்
வனசார்கு லத்துதித் தறனிலா மறமொழி
வழங்குகுழு விற்பயின்றீர்
இள்ளுநயான் சேர்காற் குள்ளமுட லாதிய
தொழிற்பட வளித்தவர்க்கே
தூயவூன் போனகமெ னக்களிவி னட்டிட்ட
துகளிலன் பெங்குளார்ந்தீர்
கள்ளவிழும் வேங்கைமலர் பாறைமீ தூற்றிடல்
கடிப்புலி யுருத்தோற்றிடக்
கண்டுமா னினமவெரீஇ யோடுசீர் மேவுதென்
கயிலைவாழ் கண்ணப்பரே. (௧௫)

கட்டளைக்கலித்துறை.

கண்ணப்ப னங்கை நுதல்சடை வாமத்தர் காளத்தியின்
கண்ணப்ப னங்கைக் கலைசெய்நு வாவுங் கலையினத்தான்
கண்ணப்ப னங்கைப் பொழுதாக்கி யூட்டிய சானவர்கோன்
கண்ணப்ப னங்கை குவித்திறைஞ் சப்படுங் கண்ணப்பனே. (௧௬)

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பன்னும் விண்ண வர்க்கெ லாம்ப கர்ந்தி டற்க ருப்புகழ்
பரவு மெங்கள் பரம னன்பர் புனிதர் கோன்ப தந்தொழ
மன்னு கின்ற விப்பி றப்பி லேமி குந்த வண்பத
மருவி னேனி தன்றி யேது மடமை யேனு றும்பயன்
சொன்ன வாய்மை நல்ல றந்து றந்து ளேனி ருப்பலந்
தொடர்ந்து ளேன்வ ருந்தி டந்து யர்ப்பி றப்பி னிப்பிற
என்ன வந்து நேரி னுங்க லங்கி டேன வற்றினுக்
கென்னு ளந்து ளங்கி டேனி ருந்த வப்பொ ருந்தவே. (௧௭)

வெண்பா.

பொருசமரின் மேனிப் பொலிவில் விறலிற்
றிருமால் நிகர்வனெனச் செப்ப - வருவிழிமைச்
சாத்தியதொண் டிற்குஞ் சமமுறுதற் கேவிசயன்
பார்த்தெயின னென்றுதித்தான் பண்டு. (௧௮)

## மடக்கு.

### இரங்கல் - கட்டளைக்கலிப்பா.

பண்டு வேலைநஞ் சுண்டக ளத்தனே
　　பரிவு கொண்டிடும் வேடர்க ளத்தனே
வண்டி ருப்படி வந்திரு மாலையே
　　யானு நின்புயத் தார்தரு மாலையே
கொண்டி ருக்குமெம் மானுக்கம் மாலையே
　　கூடு றாவிடிற் கொல்லுமிம் மாலையே
மண்டி மேனு மலர்க்கணைக் காமனே
　　வாட்டு றுதருள் வாய்ந்திடக் காமனே. (௬௯)

### வஞ்சித்துறை.

மன்னு திண்ணனார்
பன்னு செய்கையே
யுன்ன வுன்னவே
துன்னு மின்பமே. (௭0)

### தழை விருப்புரைத்தல் - கட்டளைக்கலிப்பா.

இன்ப மார்ந்திடுங் கண்ணப்பர் காளத்தி
　　யெழில்வ ரைக்சணன் பாமிக நீதருந்
துன்பில சந்தமு முஞ்சந்த நற்றழை
　　சுடரும் பொற்றொடிக் கீந்திடத் தோகையும்
என்பெ லாமுரு க்க்கா மேற்றன
　　ளிருக ணொற்றினள் வைத்தன ளற்றனம்
கொன்ப ராவிருட் கூந்தன்மு டித்தனள்
　　கூறொ ணாதவள் செய்திடு கோலமே. (௭௧)

## கொற்றியார்.

### கலி விருத்தம்

கோல மார்குழ லின்றிக் குலவரா
வேல வாட்டு மிருந்தொழிற் கொற்றியார்
ஞால மேத்துகண் ணப்பர்நற் காளத்தி
மால ராய்க்குழல் வைக்கிலென் வையமே. (௭௨)

வெண்பா.

வையத்தி னல்லரசாய் வாழ்ந்தாலென் வானத்திற்
செய்யசுக மேவித் திகழ்ந்தாலென் - மெய்யாருட்
கண்ணப்ப ரன்பிற் கருத்தூற் றுருகாரேல்
எண்ணப்ப யன்படா ரீங்கு. (சங)

## நகரணிமைகூறல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஈங்குவெங் கதிர்சுடுங் கொடுசுரங் குறுகிவா
டேந்திழாய் போந்தினிக் காணலா மாணவே
யரங்குமோர் நிகரிலா தோங்குபொன் முகரிநீர்
யாறுசேர் தென்கயி லாயமுந் தூயநற்
பாங்கமை ஞானயார் பூங்குழல் பாகமார்
பரமனார் ஞாயில்சூழ் கோயிலும் வாயிலும்
தேங்கவென் புருகுமன் புருவமாந் திண்ணனார்
திகழுமெய்ப் புகழுமே செய்யவா னிழன்மினே.(சச)

தாழிசை.

மின்னுசெஞ்சடை வேதகீதர் விழைந்தமஞ்சனம் வாயினீர்
மிக்கமேனியி லணியுமாமலர் வேடர்கோன்குடு மிக்கணே
துன்னுபன்மல ரினிதுனுண்டிடு தூயபோனக மவனெய்து
சுட்டபன்மிரு கத்தினூனிவை சொல்லொணுமகிழ் செய்தவே
பன்னுதென்கயி லேசான்புறு பற்குநற்கொல முடுகிய
பன்றியெய்திட வொன்றிவேடுவர் பதியெனத்திரி பரமனார்
நன்னுதற்கொரு பாகமீந்திடு நாதராதி புராதனர்
நண்ணுதொண்டர்க ளெண்ணமுற்றிட நல்குநாயக னார்க்கரோ.

## கிள்ளைவிடு தூது.

கட்டளைக்கலித்துறை.

நார்தந்த காளத்தி நண்ணுகண் ணப்பர் நயந்தபுயத்
தார்தந்த ரிக்கென நம்மட மான்மனந் தான்மெலிவாள்
நீர்தந்த வாசை நெருப்பவிப் பீரென நீரவர்பாற்
சீர்தந்தசெம்முகப் பைங்கிள்ளைகாள்சென் றுசெப்புமினே(சரு)

## மடக்கு.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

செப்பு மரவப் பணியாருந் தேவர்க் குரிமைப் பணியாரும்
ஒப்பு முருவங் கரியாரு முயர்ந்த பத்திக் கரியாருந்
தப்பில் பூசை புரிந்தாருஞ் சாற்று செயலே புரிந்தாரும்
எய்ப்பில்வேடர்க் கிருந்தவரு மெளியே னுளமிங் கிருந்தவரே. (சஎ)

### வெண்பா.

தவமல்கு சீரார் சவரர் பெருமான்
சிவமல்கு சேவடிநன் சேர்ந்தேம் - பவமல்கு
தீவினையுஞ் சிந்தியே செய்யும் பணிசெய்தேம்
வீவினையுஞ் சிந்தியே மேல். (சஅ)

### நேரிசையாசிரியப்பா.

மேல்கீழ் வரம்பு மாலய னறியா
நீளழற் பிழம்பாய் நிமிர்ந்து நின்றோன்
குஞ்சர முகத்தோன் குறிஞ்சிக் கிழவனென்
றஞ்சுறு மைந்தரும் வகுத்தபல் லண்டமும்
பண்டே கருவிற் பயிலாது பெற்றுத
தண்டா திறும்பால் தவிரா திருந்த
பச்சடம் புடையுமா பதிமதி முடியோன்
மெய்ப்பத்தி நாட்டப் பொத்தபி நாட்டில்
குறவரு மருளுங் குன்றுபல கெழீஇ
யுரப்பற கோட்டு வம்பியல வேலி
வுடுப்பூ ரூத வுடுப்பூர் தன்னில்
கொல்லெறி குத்தெனுங் கொடுமொழி யலது
நன்மொழி யறியா வன்மன வேடர்க்
கிறையவ னாக னிளயக வாகி
வண்ணமிக் குடைய திண்ணனென் பெயரோன்
காளைப் பருவங் கலந்த காலை
சிங்க வேற்றிற் றிறனனி சிறந்து
மிகக்கொலை புரியும் வேட்டையி னுயிர்க
ளகப்படு துயருக் ககனமர் தெழீஇ
வலங்கொளப் போற்றி விலங்கினங் கலங்க

வார்வலை போக்கி வளைத்திடும் பொழுதத்
தேணமொன் றோட மேனனி தொடர்ந்து
வெயில்பயி லறியாக் குயில்பயில் பொழிறழீஇ
நன்றறி கல்வி யொன்றியோர் மதியெனத்
தேதகதடை கிடந்து செறிகலை மலிசீர்
நீளத் திகழ்புகழ்க் காளத்தி யென்னுந்
தென்கயி லையில்வாழ் சிவனைக் காண்டலும்
முந்தக னொருவ னருவிழி பெற்றெனப்
பலநாட் பசித்தோன் பாலமு தெதிர்ந்தெனச்
சேய்முகங் கண்ட தாயென மகிழ்ந்து
பருகற் கொத்த பண்பின னாகிக்
கடடித கழுவிக் கரைந்து கரைந்தே
இரும்புபொன் னான வியற்கை போல
மட்டறு மன்பே வடிவங் கொளீஇக்
காளத்தி தேவே கருணைத் தேவே
ஆளத் திகழ்ந்த வற்புதத் தேவே
மலையினை யெனக்கு வாய்த்துறு மணியே
வான்றிகழ் தருவே தோன்றமிழ் தருவே
தனித்திங் கிருத்தனீ தகுமோ தரியேன
உனைப்பசி தீர்ப்பா ரொருவரு மிலரே
எந்தனை காணு மின்றிநின் றனையோ
ஐயா வினிநீ நையா தமுதகவென்
றேகியூன் வக்கிப் போகியுண் பித்து
விட்டக லாது கட்டுடைக் காவல்
கொண்டிர வெல்லாங் கண்டுகண் களித்து
மறுநாள் விலங்கூன் பெறுமா றகன்று
நாயுடன் வேட்ட மாடி நலம்பெறப்
பலவிலங் கரிந்தூன் பகுதியிற் கோத்துத்
தீயிற் காய்ச்சி வாயிற் சுவையறிந்
தினியன கல்லையி னினிதகிழ்ந் தமைத்தே
தேனுடன் கலந்து செங்கரத் தேந்தி
வேறோர் கரத்து விறகினைத் தாங்கித்
தூய்பொன முகரிநீர் வாய்ப்பட வடக்கிப்
படுமலர் பலவுங் குடுமியிற் பரப்பி
மலைமேன் மருந்தின் மருங்கி னெருங்குபு

கோசரி யணிந்த வாச மலரெலாம்
செருப்படி யொதுக்கித் திருப்புன லுமிழ்ந்தண்
கிலைமலர் வீழத் தலையெதிர் தாழ்த்திக்
கல்லையிற் பிசித நல்ல தெடுத்தெடுத்
திதுமிக வினிதே யிதுமிக வினிதே
தேனளைந் தினிக்கு முனமி லூனிது
பதமுற வக்கிப் பயில்சுவை பார்த்தேன்
உண்க வுண்கவெ னுயிரே யுண்கென
வேட்டன காட்டி யூட்டினன் பின்னர்த்
தேவ தேவன் றிருமுன் னின்று
நடம்பல பயின்று நாடொறு மகிழ்ந்து
தான்கண் டவாறே சங்கரன் பூசை
புரிதலைச் சிவகோ சரிதவன் கண்டு
புண்ணிய வுருவே புனிதத் திருவே
என்னுறே தா றெனக்கிங் கினித்திடு மழுதே
சிவசிவ வுனக்கிது செய்யத் தகுவதோ
வெனநெடி திரங்கி யிறைதிரு முன்னர்
என்புக ளொதுக்கி யினிதமர் புனிதம்
செய்தருச் சித்துத் திரும்பினன் பின்னர்
நாகனுந் தத்தையு நண்ணி வேண்டிடத்
தனக்கிறப் பறிப்பினுந் தானவை விடாஅ
நினைப்புடை யுடுப்பென நிமலனை யகலான்
செயறினங் கண்டங் கியன்மறை யவனுறு
மனமெலி வகற்றக் கனவினி லிறையவன்
அன்பின் செயலஃ தென்ப துரைத்தபின்
மறுநாள் மறையோன் மறைந்தங் குறவரன்
கண்ணிலொன் றுதிரங் காட்ட வேடர்கோன்
கைமெய் சோர்ந்து கால்கட ளாடி
மூர்ச்சித் தெழுந்தபின் முடுகியங் கோடிக்
கொடியருண் டோவெனக் கொறுகொறுத் தலைந்தே
இலைப்புரை கிளைத்து மிலையெனத் தேறிக்
கண்ணுதல் கண்ணிற் புண்ணீர் மாறத்
திருந்துறத் தேடி மருந்துபல பிழிந்துங்
குருதி நிற்காக் கொடுமை கண்டு
தன்கண் ணென்றைத் தானிடந் தப்ப

உதிர நிற்பக் குதிகுதித் தெழலும்
மற்றைக் கண்ணிலுங் குருதி வடியச்
செருப்புப் பாதஞ் சிவன்விழி சேர்த்தி
யின்னொரு நாட்டமுண் டென்றுளங் களித்துப்
பகழித் தலைபா லகழப் புகுதலும், பரனார்
அதுதரி யாதே கதுமென வுற்று
"நில்லுகண் ணப்ப நில்லுகண் ணப்பவென்
அன்புடைத் தோன்றல நில்லுகண் ணப்பவென்"
றொருகை நீட்டி யிருகையுங் கணையோ
டகப்படப் பிடிக்கவே யருவிழிப் புண்ணீங்
ககன்றது பாராய் அன்பினிற் றலைவ
நல்லை நல்லையுன் போலன்பக் கில்லை
தொல்லடி யாரெனச் சொல்லமிழ் தீந்து
மறைவுறு மறையோன் றிறனறிந் தேத்தத்
துந்துபி முழக்க மந்தர திசைப்ப
வானருள் பரவிச் சுரர்மலர் சொரியச்
சிவகதி தரப்பெறுந் திண்ணனைத்
தவகதி பெறற்காச் சார்ந்தன ஞானே. (௪௯)

ஊசல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆளுடைக் கழற்சிவனா ரன்ப ரானார்
அருமைபெறுங் கண்ணப்ப ரடிமை கூறி
நீளுடைப் பிறவியறு நெறியை முன்னி
நித்தலுஞ்சித் தங்கரைய நின்று நன்று
வாளமருங் கண்மடவீ ராடி ரூசல்
மருவுதன மலைபசைய வாடி ரூசல்
வேளகமுங் குழையமிக வாடி ரூசல்
விழையுமலர்க் கொடியனையீ ராடி ரூசல். (௫0)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்த விருத்தம்.

ஊசல்வினைப் பாசமடித் தேயிடர்பெற் றேறடியினைப்
போமொறுமிப் பூதலமுற் றுயல்வீரே
தூசையறுத் தானுறுநற் றேசையிடப் பாகர்சடைச்
சோதிபதத் தார்வமிகுத் தவரானார்

காசில்வனத் தேதிரிகைக் கார்முகவிற் பாணமுடைக்
காதுதொழிற் கானவர்மெய்த் திண்ணனார்சீர்
தேசுறுபொற் றாள்பரவிப் போதுகளிட் டேபுகழத்
தீவினைசற் றேனுமுறைச் சினவாவே. (௫௧)

கட்டளைக்கலித்துறை.

சினக்களி றங்குறு திங்கள்கண் ணண்ணச் செறிகவள
மெனக்களி காளத்தி யால்வரைக் கல்லா லிடத்திருந்தேன்
றனக்களி வாய்செய்ய நற்கரும் புண்டதைச் சார்சுவையின்
மனக்களி யால்விட் டகலாது நாகன் மகக்களிறே. (௫௨)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

களிதந்த கிராதர்கணஞ் சூழ்ந்து போற்றக்
கான்வேட்டை யாடிவருங் கண்ணப் பற்கு
வெளிதந்த வருள்பொழியும் பரமர் நின்ற
மேவுதிருக் காளத்தி விலங்கல் காண
அளிதந்த வன்புருவ மாயிற் றென்றே
யறைகுவர்மற் றதன்முல மறிந்தோ ரன்றே.
ஒளிதந்தப் பரவேடற் றழுவி முன்ன
மின்புற்று விசயனென வியம்ப லாலே. (௫௩)

கார்.

கொச்சகக்கலிப்பா.

இயம்புறுபன் பேசிவபா மெனவுலகோ ரறிந்துய்ய
நயம்புரிந்த திண்ணர்வரை நமைநீத்தா ரெண்ணுமோ
பயம்புரிகார் காரிகையார் பாற்பொன்னார் மின்னாச் -
சயம்புரியம் பெய்கின்ற தன்மைபெற வார்த்தனவே. (௫௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

தனையர்பெறு முலகினவ ருனைநிகரு மொருமதலை
சமையவெவ ரடையுமியலார்
கினையுறுந லனையுடைய னெனுமவனு முனமுறைசெய்
கிகரிறவ மிதெனவுரையாய்
மனைவிமக வெனுமுறவி லலையுமென திதயமது
மயலறவொர் வழியையருள்வாய்
வனையுமொளி மிகுதென்வெளி வரையிலமர் பரமர்திரு
வதனவிழி யுதவுமணியே. (௫௫)

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

மணியார்ந்த காளத்தி யாதேவ னடிமருவு
மணியார்ந்த வேடர்குல வருமணியி னடிபரவிப்
பிணியார்ந்த பிறவியறப் பெட்புறுபா றினியாமு
மெணியார்ந்த துதிபலவு மிசைத்திடுவோம் வாரீர்
ஈசர்மகிழ் நேசரெண வியபயிடுவோம் வாரீர். (௩௬)

வேற்றொலி வெண்டுறை.

வார்பெறுபல் வலையிட்டு வனவேட்டை வினைமுடித்து வருவேடர்க்கு
சீர்பெறுகண் ணப்பர்வினிற றேவர்க்கு மேலாகிச் சிறந்தாரய்யா [ட்
கார்பெறுமன் புறுநெறியை நாடினவ ரன்றோ
பேர்பெறுசங் கரனருள்சேர் பெற்றியுடை யாரே. (௩௭)

களி.

தாழிசை

ஆருப்பிறை சூடும்பெரு மானன்பத மேவு
மன்பிறபொலி யின்புற்றிடு மருமைத்திரு வேடர்
சேருயபுகழ் மிகவிட்டொளி திகழ்தென்கயி லாயஞ்
செப்பிக்களி யுண்டேவரு சித்தக்களி யேயாம்
கூருஞ்செயல வாமதநியல் கொளலாமது வினிதே
குறிமாந்திர மறிமின்பல கோலந்திகழ் குடியும்
பேருங்குல முறுசாதியு பறவாவகை தாலம்
பேசுந்திற மெயமட்டுள பிழையற்றவை பேறீவ (௩௮)

மதங்கு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பெறுகின்ற சீர்மலியுங் காளத்தி வாழ்வேடர் பெருமான் சீர்சொல்
லுறுகின்ற மதங்கியரே யிருகரத்து மவாளேந்தி யுலவி னீரே
தெறுகின்றவிழிவாள்கொண் டிளைஞருயிர்சிதைத்தமையீர்செப்புமாதை
யறுகின்ற முனிவரையு வென்றிகொள வோவிங்கே யமர்கின் றீரே.

குறம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஈரமதிச் சடையண்ண றென்கயிலைக் காட்டி
விருக்குமலைக் குறிசசியில்வாழ் குறவரெனக் குறவர்
சீரயர்நற் றிண்ணார்முனம் பிறப்பர்பினை பிறவார்
தெரிமினெனக் குறிபுகலுஞ் சிறுகுறத்தி நானே

கூரவயிற் றெரிதணியக் கூழ்வார்த்துப் பழைய
கூறைகொடுத் தென்குறியுட் கொண்டறிநீ யம்மே
நேரமர்கைக் குறிகண்டேன் கண்ணப்பர் நினைவே
நினக்குளதோர் தினத்திலவர் நேர்வருகை நிசமே. (௬0)

### ஊர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நிசமுற்ற வடியரெலா முனிவரெலா மமரரெலா நின்று போற்ற
வசையற்றுத் திசைமுற்று மிசையுற்றுத் திகழ்திண்ணனார் மகிழூர்கேட்
வசமுற்ற கரிபுரியாரானபழை சோலையொடு மணிவாரூர[பின்
இசைவுற்று நீள்தந்தி பூசித்த காளத்தி யிடமாரூரே. (௬௧)

### வண்டுவிடு தூது.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்தவிருத்தம்.

இடறுமவ ணடிமலர மரன தன்பரவண
மிபனு நஞ்சவா ராஜமே
படருமவெ னன்றிபெறு புபம ணிந்தகொரு
படலை தனறுமண மாலையே
கொடுமி தனறியிவ ளடும தனசமாசெய்
குறியி ருந்தகணை பாயவே
வடிவு டனறுயிலகொள செயன்ம றந்தனளுப்
வகையி லென றுரைமின வாழியே. (௬௨)

### வெறிவிலக்கு.

கட்டளைக்கலித்துறை.

வாழ்வுடைத் திண்ணனா ரளவென கயிலை மலையிலொரு
தாழ்வுடைத் தென்று மறிபுபிர கொள்ளச சமைவதுவும்
சூழ்வுடைத் தென்று கருது மதியிலர் தூரநிற்க
ஆழ்கடற் பூமியி னீயு படைவை யணிமுருகே. (௬௩)

### நாரைவிடுதூது.

கொச்சகம்

முருகபர்வா னிபின்மீனை முனனுமொரு முந்துநாராய்
கருதுமனத் தன்பர்வாக கண்டுரைத்து நீவாராய்
பெருகுபவ மோகமுறப பேரருள்செய் பிஞ்ஞகனாக்
குருகுமன வேடரிறை யோகதுயுமில் வுயர்வரைக்கே. (௬௪)

### வெண்பா

வரைவில்லி யன்பின் மலைவில்லி திண்ணன்
வரைவில்லி யற்செருப்பின் வாய்த்த - கரைவிலிசை
யத்தொடங்கி னிப்பா வினிப்பிறவாய் நீபிறவாய்
பாத்தொடங்கி னிப்பார் பரிந்து. (௬௫)

### சம்பிரதம் - எண்சீர்ச்சந்த விருத்தம்.

பரியந கத்தினை விரலினெ டுப்பனோர்
படர்செய்பு லைப்புலி யெனவுய்வி டுக்குவன்
விரிகொடி முட்டையி லெழுவன மூற்றயன்
விரவம லைக்குல மலரிலவ ரச்செய்வன்
உரியவி வித்தைகள் பொருளல மற்புய
முறுமற வர்க்கிறை யுரைசெய்க ணப்பர்தம்
அரியசெ யற்கினை யவனித லத்திடை
யடையுபொ ருத்தனை விளையல ழைப்பனே. (௬௬)

### முதுவேனில் - எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அழிவிலா நிலாமுற்றக் கலர்மென் பள்ளி
யடைந்திருக்கத் தென்றலிளங் கன்று சோலைச்
செழியமா மலரினறு மணங்கொண் டுண்டிச்
சீதளமா யுடன்மீது தைவந் தேகப்
பழியிலா முதுவேனில் பார்த்த போதும்
படுபொருட்குப் பிரிந்தகொடும் பதகர் வாரார்
சுழியிலா பூதாவிழி சிவனுக் கீந்த
தொண்டர்நக ரெனக்குறற துணைபார் தாமே. (௬௭)

### நற்றாயிரங்கல் - கட்டளைக்கலித்துறை.

தாமநறைக்குழல் வன்மனப் பேதையென் றன்னைவிட்டுக்
காயனொ ரேதிலன் பின்னடந் தாள்சுரங் காதலோடே
சேமமுறுமட்ட மாசித் திகளணை தென்கயிலை
நாமநற் கண்ணப்பர் தாள்புக ழாரென நன்றிதுவே. (௬௮)

### நாணிக்கண்புதைத்தல் - அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்தவிருத்தம்.

நன்றுவன மொன்றியுறை தென்கயிலை
யின்கணபர் நம்பர்பத நப்புதிணனோர்
நின்றவரை யின்பமொடு தங்குதிரு
மங்கையென நெஞ்சமுடை வஞ்சியிடையீர்

வன்றுயர்செ யப்புபமெ லூர்தனத
  டப்புறகு வஞ்சனையு டன்றிகழவே
துன்றிமிளி ரம்புநிக ரப்பகம
  றைந்தசெயல் துன்பமிகு மென்பதுளதே. (௬௯)

இருபனிக்காலம் - கலித்துறை

உள்ளத் திருந்தே புறம்போன வன்னெஞ்ச முடையார்செயுங்
கள்ளத் திருக்கை நினைந்தேன் றுயர்க்கையொர் கரைகண்டிலேன்
வள்ளற் பிரானெங்க ளானன்பர் கண்ணப்பர் வரைமீதிலே
தள்ளப் படாவிப் பனிக்கால மேயென் றனக்காலமே. (௭0)

மடக்கு.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காலமிதிற் காரிகையாள் கண்ணிறைநீ ரனவே
  கருதுமுனக் குறுமருமைக் கண்ணிறைநீ ரனவே
ஏலமலர்க் குழலிவடன் மெய்யுமுரு கினதே
  என்னுமுனக் காளன்பின் மெய்யுமுரு கினதே
கோலமுறு மிவட்கிரண்டு குவிதனமம் புயமே
  கூறுமுனக் கிருவரைபோற் குலவிடுமம் புயமே
சாலவிவை யொற்றுமைகண் டிவடுன்பந் துடையீர்
  தகுசீர்க்கண் ணப்பரெனத் தலைமைமிகுந் துடையீர். (௭௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உடையவர்க் குறுகண் ணர்க்கு மொளிவிழி யுடைய கோவே
தடையில்சீர்த் திண்ணா னென்னுந் தலைவனே மலைவி லூன்றன்
புடைவரு மன்பி லோரா யிரத்திலோர் பாகம் பொல்லாக்
கடையனு மடையு மாறு காட்டிநீ யருளு வாயே. (௭௨)

தாழிசை.

அருளாளன்றரு நிலையினர்கர மமர்தருங்கரி சிலையினர்
  அண்டருநதுதி செய்யுமெய்த்தவ ரவனியாசைகள் பொய்த்தவர்
திருவுருக்கரு வரையினர்புலி யதளுடுத்திய வரையினர்
  தேடுவேடர்க ளிறைவரேயடி யேனுளத்தினு முறைவரே
தருவகற்றிய பத்தியார்சிவ னடிகள்பற்றிய முத்தியார்
  காதலூற்றதி ணப்பனார்விழி யேபெயர்த்தக ணப்பனார்
மருவுநற்றொடை தந்திலார்மதி மயலறும்படி வந்திலார்
  பாதுதுன்பறும் வண்ணமேயருளாதுறிற்பழி நண்ணுமே. (௭௩)

தலைவியைப்புகழ்தல் - கட்டளைக்கலித்துறை.

நண்ணிய வன்பெவை யுப்பிழம் பாக நனிதிரண்ட
திண்ணர்பொற் குன்றிற் கிளிகடி யுங்குயில் சேர்மொழிபார்
கிண்ணத் தனத்தின்முத் தாரமு மாரமுங் கேழ்கிளரும்
வண்ணங்கண் டாற்புவி யோரிமை யாரென்ப வாட்கண்களே (௭௪)

மடக்கு - வெண்பா.

கண்ணனயன் போற்றிடுமுக் கண்ணனயந் தாளமுகக்
கண்ணனய னந்தந்த கண்ணப்பர் - வண்ணமலர்க்
காற்றுணையே தஞ்சமெனக் கைக்கொண்மன மேமறந்தக்
காற்றுணையே தஞ்சலினிக் காண். (௭௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இனிநா மறிவேங் தென்கயிலை யீசர் தமக்கு விழிமூன்று
முனமே யிருக்க நினைத்திரு முகக்கண் கொண்ட முடிவம்பா
தனியே யெரிகண் ணென்றொன்று சார்பா லக்கண் மறைவாகும்
பனியா ரொருகண் பகன்மறையும் பண்பால் வேடர் பணியதியே.

மடக்கு - கட்டளைக்கலிப்பா.

பதியு டைப்பூர்க் கிருந்தவ மன்னவன்
பகரு நாகற் கிருந்தவ மன்னவன்
மதிஞர் பத்தர்கள் முன்னிடற் கானவன்
மன்னு மூனரன் முன்னிடற் கானவன்
கதியி னேடு தனுவிடு கோலனே
கரிய வாகத் தனுவிடு கோலனே
வதிபு நெஞ்சுறப் பாக்கிய முற்றுமே
மருவு முள்ளுவப் பாக்கிய முற்றுமே. (௭௭)

உருவெளி - அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்த விருத்தம்.

முற்றுமன் புருவாய கொற்றவன் றவவேடர்
முற்றொழுந் திணைமனே
பற்றுதென் கயிலாய நற்சயந் தனமேவு
புத்தியொன் றியபாகனே
உற்றபங் கயமேவ வைத்தலர்ந் திடுநீல
மொத்தசெந் துகிராமே
பெற்றிடுங் கொடியான்மு னூற்றகன் பயனுகு
பெற்றிகொண் டெதிர்சேருமே. (௭௮)

தலைவிகூற்று - அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்தவிருத்தம்

சேர வெனக்குற வொன்றிமையார் சேய ரெனப்பொலி திங்களே
ஈர நிலத்தழல் சிந்தவே யிது டனெறுத்தது தென்றலே
ஆர ணிவித்தக ரன்பரே யாய கணபபரை நெஞ்சமே
தேர விருத்துமி தொன்றுமே தீய வுருக்குமெனென்பதே (எகூ)

கடலொடுபுலம்பல் - கொச்சகம்

என்பணியார்க் கின்பணியார் கண்ணபட ரெழினாட்டில்
நன்குறுபா யலையுநதி நறுநதாளம வளைசிநதி
மன்பெருக வார்த்திரங்கும வார்கடலே யென்போனீ
யன்புடையார்ப பிரிநதனையோ வலனுமுறற காய் மனமே. (அ0)

பாண்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மனமி குநதுயர் கொண்டிடு மெங்கள்பால
வணணமார் பொய்கூறித்
தினமி ருநதுயா தனமள வளநதுதந்
திசமுதனம் விலைசெய்வாா
இனமி குநதிட வமர்தலை யன்பரன்
பியலிசை கொடுபபாணா
வனமி குநதகண் ணப்பர்மால் வரைநகர்
வருநதிலந திருபபாயே (அக)

காலம் - மடக்கு - எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருவிளங்கு மடவார்வம் பலர்தூறறுங காலம
சித்தசனுர் கைச்சிலைவம பலர்தூறறுங காலம்
உருவிளங்கு மெரிவிரிகது மப்புலிக்குங் காலம
உரைமலயக் காலென்னு மபபுலிக்குங் காலம்
மருவிளங்கு மிதழிமுடி வள்ளலடி பரவும்
வனசரர்கோன் கண்ணப்பர் மருவுதிரு நாட்டிற்
கருவிளங்கு மெனதுவளை கலையகற்றுங காலம
காதலர்செனன் மொழியுளரோ கலையகற்றுங் காலம் (அஉ)

வெண்பா.

காற்கண்ணார் மாலுங் கருதுமரைக் கண்ணரயர்
மாற்கண்ண ராயானை வாய்த்திலரே - கோற்கணையாற்
கண்ணிடந்த கண்ணப்பர்க் கன்றேசீர்க் காளத்திப்
பெண்ணிடங்கொண் டார்முனின்ற பேறு. (அங)

### வலைச்சியார் - கட்டளைக்கலித்துறை.

பேறு பெறுதிருக் கண்ணப்பர் வண்ணப் பெருநகரின்
மாறுறு வாவியின் மீன்கொண்டு விற்கும் வலைச்சியரே
கூறுறு கண்வலை யாலாவி முற்றுங் குலைத்திழுப்போர்
வீறு மிறருமைப் போற்கண் டிலன்யான் விளம்பிடவே. (அச)

### எழுதரிதேனல் - அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

யானு மைத்திடல் கேண்மினே யாது நீருரை செய்யினும்
ஆனு டைக்கொடி யண்ணலா ரடிவி ருப்பிய திண்ணனார்
தேனு டைச்சிறு குன்றின்மேல் சேர் மடக்கொடி நின்றதே
போன லப்பொறி வளையினும் புகன டைக்கரி சாமரோ. (அரு)

### இடைச்சியார் - எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அரிய முகில் வில்லேந்தி நடந்தா லன்ன
வணியுருவக் கண்ணப்பர் நகர்சா ளத்தி
பரியதிரு வீதிதொறுங் குடமு லைப்பால்
உறுவிலைப்பா லெனநீர்விட் டுரையா நிற்பீர்
கரியவிழிப் பானயபபால் வனப்பா லிங்கே
காண்போர்மாற் பால்கொள்ளக் கலசங் காட்டீர்
பெரியநல வண்டர்குல மென்பீ ரானாற்
பேசுமிடைக் கொடிச்சியராய்ப் பெறும்பே றென்னே.

### இரங்கல் - மடக்கு - எண்சீர் ஆசிரியவிருத்தம்.

பெற்றவூர்த் தலர்டா லுற்றசீர்த் திண்ணனார்
பிழையிலா மொழியும் வழுவிலா விழியும்
சொற்றயார் புயமும் பற்றுகார் முகமும்
கொண்டல்போ லுருவுங் கண்டிலேன் கொடியேன்
உற்றமா வினமே முற்றுமா வினமே
உரைகொடுத் தழையீர் வரையிடத் தழையீர்
கற்றிடுஞ் சுகமே யற்சொராஞ் சுகமே
கண்டிருந் தேனே கண்டிருந் தேனே. (அஎ)

### தவம் - வெண்பா

தேனார் மலர்ப்பொழில்சூழ் தென்கயிலை யீசர்க்காள்
ஆனார்கண் ணப்ப ரழகியநற் - கானுடி
யுறரோர்தி னங்கழித்தா லொண்டவம்வே றுண்டுசொலோ
மற்றோர்தி நன்குளமே வாநது. (அஅ)

### பிச்சியார் - கொச்சகம்.

வந்துமயல் கொளத்திரியும் வாட்கடைக்கட் பிச்சியார்
எந்துயரங் கண்டுமுயி ரென்பறிக்க நின்றாரே
பந்தமறுங் கண்ணப்பர் பண்பார் திருநகரிற்
சந்தமுறும் வீதி தனிமேவோர் மருங்குறவே. (௮௯)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மருங்கு வானவர் தோத்திர மோசையும் விஞ்சையர் வரிப்பாட்டு
நெருங்கு மாதவர் மாமறை யோத்தொடு நிறைதரு காளத்தி
ஒருங்கு நற்றவ முற்றகண் ணப்பர்த மொலிகழற் றிருத்தாளை
முருங்கு தீவினைக் காட்டினை யெரிதரு முளரியின் கொழுந்தம்பா.

### தோழிகூற்று - கலித்துறை.

கொழுந்தளிர் மென்பூ மாலை தொடுப்பார் குளிர்காவூ
டெழுந்தலர் கொய்வார் மாலை புனைப்பா ரிவர்தமுட்
செழுந்தனி மேவோ ருள்ளம தாற்றாட் டெரிகில்லேன்
றொழுந்தகு திண்ணர் நல்வரை தன்னுட் டுணிவேனே. (௯௧)

### வஞ்சிப்பா.

துணிவொடொலி தொடர்கானிடை
நணிவேட் டையி னலம்புவரு
தெனசயிலையிற சிவபூற்றிட
நன்கடைதரு நவிறிண்ணனார்
பெருகன்போடு முருகிதினம்
தருமூன்கொடு சமைபூசனை - மகிழக்,
கொண்டவ னவனொடு கோலநல விழியு
மண்டரும் வியப்ப வரனார்
பண்டையிற கொண்டது பரவிய துலகே. (௯௨)

### கைக்கிளை - மருட்பா

உலவு விழியிமைக்க வொள்ளடி பார் தோய
நிலவுமுகம் வேர்வரும்பு நீர்மை - குலவுபுகழ்
வானமர் திண்ணர் வரையிடை கண்ணுமிம
யானயர் நோக்கி வதியிடம்
யானவ ருலகெனும் வாய்மைவந் ததுவே. (௯௩)

### வண்டு - கட்டளைக்கலித்துறை.

வந்தனை செய்து மருவுமிப் பாவை வருத்தமுறு
சிந்தனை தீரவென் செய்வது செப்புமின் றேனினங்காள்
கந்தனை யீன்றதென் காளத்தி நாதர் கழலடைந்தார்
நிந்தனை யற்றன்பு நேர நினையார் நிகழ்திண்ணரே. (௯௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அராவி ராவுசெஞ் சடையிடை வெண்மதி யலைபுனல் பூங்கொன்றை
குராவி ராவுபச் சறுகுபொன் மத்தமுங் குலவிட வைத்தாரைப்
பராவி ராவுடன் பகலகல் கிலர்சரண் பற்றிய திணர்சீரை
ஓராவி ராவுளத் தேத்திடின் மறலியா லுறுதினி திருப்பீரே. (௬௫)

கலித் தந்தவிருத்தம்.

இனிதொன்றிய வனநின்றவொ ரிசைகொண்டிடு திணனார்
வினைசிந்திப கழன்மென்பதம் விடலென்செய லலவாற்
கனிவொன்றிய நினைவின்படி கருதன்பொடு கலவா
மனையின்புற மருவுப்பத மனநின்றற விடவே. (௬௬)

வெண்பா.

விட்டபொரு ளெல்லாம் விருபமிவிரும் பிப்பலகாற்
கெட்டமன மேயொன்று கேட்டிநீ - துட்டமல
பந்தமே சேரமற் பாவுபுகழ்க் கண்ணப்பற்
கந்தமே தொண்டா யடை. (௬௭)

மடக்கு - எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அடைப்பரி கலத்தா னான்றினக் களித்தீர்
அடித்துதி சொலவெனக் களித்தீர்
உடைபெரு மிருளை யகநக விரித்தீர்
உயர்புகழ் புவிமிக விரித்தீர்
தொடைப்புப றவர் பெற்றிடுங் கோவீர்
சூழ்நதான் பற்றிடுங் கோவீர்
கடைப்படு வேனை விலமையா வணமே
கைக்கொள்வீ ரடிமையா வணமே. (௬௮)

கட்டளைக்கலித்துறை.

ஆமிதென் றேவிலங் கூனை யருக்கி யுடனருத்தித்
தோமில்கண் ணப்பர் கழலுறு மேத்தித் தொழும்படைவோர்
பூமியி லெந்த வினைசெய் திருக்கினும் புண்ணியரே
சாமிதென் காளத்தி யப்ப னருளுக்குத் தக்கவரே. (௬௯)

இளமைசெப்பல் - அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தக்கவெலா முரைத்துரைத்துக் கண்ணப்பர் தனிவரைசார் தயங்கு
பக்கமக லாதுவந்து பலகாலுஞ் சிலகூறிப் பரிவினோடு [நாட்டிற்
கைக்கமலத் தாரகறு முறிகொண்டு பின்னிற்குங் களிறன் னாய்தேர்
மைக்கரிய விழிகள்ளக் கற்றிலகற் றனமுளையா மான னாட்டே. (௪00)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நாட்கமலத் தயன்பாலு நண்ண வொண்ணா
நப்பரடிக் கன்புடைய வேட நம்பி
தாட்கமலந் தலைக்கமலம் பொருந்தத் தாங்கித்
தவிராத பிறவியெனுந் தளையை நீங்கி
வேட்கமலந் துணைபருகும் பிணைய னார்செய்
வினைசாலம் வெயில்கண்ட பனிபோல் வீயச்
சேட்கமலக் கார்வரக்காண் டேரங்க போகை
சேர்வதுவே யிம்மையிணுன் றேர்ந்த சீரே. (௧0௧)

---

### வாழி

வாழி காளத்தி மன்னுஞ் சிவன்கழல்
வாழி யன்பர்கண் ணப்பர் மலர்புகழ்
வாழி யெங்கு மறையுட னாகமம்
வாழி முத்தமிழ் வான்முகில் வாழியே.

## கண்ணப்பர் கலம்பகம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

### இந்நூலாசிரியர் மாணவர் கூறியவை :

### கட்டளைக்கலித்துறை.

பன்னுங் கலியுக மையா யிரத்திரு பானிரண்டி
லுன்னுந லாண்டு ரௌத்திரி பாசி யுறுமதியிற்
றுன்னும் புதுவைத் துரைசாமி நாவலன் றூயபுகழ்
மன்னுகண் ணப்பர் கலம்பகம் பாடி வழங்கினனே.

### கொச்சகக்கலிப்பா.

எங்குந்த மிசைவிளங்க விருக்கின்ற வெழின்மிகுந்த
செங்குந்தர் குலவிளக்காந் திருவுடையான் சிவனடியிற்
பொங்குந்த னுணர்வுடையான் புகல்புலவன் துரைசாமி
தங்குந்தண் டமிழ்க் கவியே தருநிலத்தின் னமிர்தாமால்.

### வெண்பா.

கண்ணப்பற் காளாய்க் கவின்றுதிசொற் றேயுற்றான்
கண்ணப்பத் தொண்டனெனுங் காரணப்பேர் - நண்ணுலக
சபபவங்க ளயவெனத் தள்ளியே யெங்குரவன்
வெம்பவங்க டய விரைந்து.

சிவமயம்.

# அன்பும், கண்ணப்பரும்.

---

வெண்பா.

வாளா பொழுது கழிக்கின்றார் மானிடவர்
கேளார்கொல் அந்தோ கிறிபட்டார் - கீளாடை
யண்ணற் கணுக்கராய்க் காளத்தி யுண்ணின்ற
கண்ணப்ப ராவார் கதை.

(கைலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி)

---

## அன்பு.

அன்பானது, தான் வேண்டப்பட்ட பொருளின்கட் டோன்றும் உள்ள நிகழ்ச்சி. உலகத்துப் பொருள்கள் உண்மை மாத்திரை யுணர்த்திப் பிழம்பு உணர்த்தப் படாதனவும், உண்மையும் பிழம்பு முணர்த்தப் படுவனவுமென இருவகைப்படும். அவற்றுள், உண்மை மாத்திரை யுணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படாதன காமம், வெகுளி, மயக்கம், இன்பம், துன்பம் முதலாயின. உண்மையும் பிழம்பு முணர்த்தப்படுவன மாடம், கூடம், மாளிகை, சூளிகை, மனிதன், மரம் முதலாயின. அன்பென்னும் பொருளின் உண்மை மாத்திரையல்லது பிழம்பு உணர்த்தலாகாது. அன்புடையாரான குணங்கண்டவிடத்து இவை உண்மையான் ஈங்கு அன்பு உண்டென்று அனுமித்துக் கொள்ளற்பாற்று. இவ்வன்பு உலகத்துப் பொருள்களில் பலதிறப் பட்டு நிகழும். நாயகன் நாயகியிவர்கள்பால் உளமீதல், சாவிற்சாதல், நோவினோதல், ஒண்பொருள் கொடுத்தல், நன்கினிது மொழிதல், புணர்வுநனி வேட்டல், பிரிவு நனியிரங்கல் முதலியன காணப்படும். பரமேசுரன்பால் உளமீதல், அப்பெருமானது உண்மையை நினைக்குந்தோறும் கேட்குந்தோறும் காணுந்தோறும் தன்வசமழிதலும், மயிர்க்கால்தோறுந் தில்லையுண்டாகப் புளகித்தலும், ஆனந்த அருவி பொழிதலும், விம்மலும், நாத்தழுதழுத்தலும், உரைதடுமாறலும், ஆடலும், பாடலும், அச்சிவனுவப்பன செய்தலும், வெறுப்பன ஒழிதலும் பிறவும் காணப்படும்.

நாயகன்நாமம் கேட்டவுடன் வசமழிதல் தலையன்பு எனவும், நாயகனைக்கண்டவுடன் வசமழிதல் இடையன்பு எனவும், நாயகனைக் கூடினவுடன் வசமழிதல் கடையன்பு எனவுங் கூறுவர்.

இவ்வன்பு இல்லாவழிச் சிவபெருமானை அடைதல் ஒருவாற்றானும் இயையாது. "நெக்குநெக்கு நினைபவர் நெஞ்சுளே - புக்குநிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன் - பொக்க மிக்கவர் பூவுநீருங்கண்டு - நக்குநிற்பனவர் தம்மை நாணியே." என்றார் திருநாவுக்கரசுநாயனார். இத்தகைய அன்பு, பல பிறவிகளிலே பயன் குறியாது செய்துள்ள புண்ணிய மிகுதியினாலே சிவபிரானருள்செய்ய வந்து தோன்றும். இடையறாது முறுகிவளரும் அன்பின் முதிர்ச்சியிலே சிவம் விளங்கும். ஆதலால், அன்புஞ் சிவமும் இரண்டற அபேதமாய்நிற்கும். இதனை, "அன்பினில் விளைந்தவாரமுதே" "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த வின்பமே யென்னுடையன்பே" "அன்பே சிவமாயமர்ந்திருப்பாரே" என அனுபூதிமான்களாகிய பெரியார் திருவாக்குக்களானறிக.

## கண்ணப்பர்.

இத்துணைப் பெருஞ் சிறப்பினதாகிய அன்புடைமையிலே தமக்கு உயர்வொப்பின்றி விளங்கிய பெருந்தகையோர் இக்கண்ணப்பநாயனார். இவர் வேதாகமங்களைக் கற்றல் கேட்டல் சிறிதும் இல்லாத வேட்டுவசாதியிற் பிறந்தும், சிவபிரானிடத்து மெய்யன்புடையரானதற்குக் காரணம், முற்பிறப்பிலே வேதாகமங்களை ஓதியுணர்ந்து சிவபெருமானை மனம் மொழி மெய்களால் வழிபட்டமையேயாம். இக்கண்ணப்பநாயனார் முற்பிறப்பிலே பாண்டவர்கள் ஐவருள் ஒருவராகிய அருச்சுனராவர். பாசுபதாஸ்திரம் பெறவேண்டிப் பெருந்தவஞ்செய்த அருச்சுனரோடு கருணாநிதியாகிய பரமசிவனார் வேட்டுவவடிவங்கொண்டுவந்து விற்போர்செய்து அவரது வில்லினால் அடிபட்டு, பின்பு அவரைத் தீண்டி மற்போர் புரிந்து, அதன்பின்னர்த் தமது திருவுருவைக்காட்ட, அதுகண்டற்புதமெய்திய அருச்சுனர் பரமேசுரனை வணங்கித் தமக்கு முத்திதருகவேண்டினார். அதைக்கேட்ட சிவனார் "நீ பகைவரை யழிக்கும்பொருட்டுப் பாசுபதாத்திரம் பெறநினைந்து தவஞ்செய்தனை ஆதலால், இப் போழ்திதனைப் பெறுதி" யென்று சொல்லித்தருளி, "நீ என்னை வேடன் என்று இகழ்ந்தமையால் பின் வேட்டுவராஜனாகப் பிறந்து திருக்காளத்தி மலையையடைந்து, அன்புருக்கொண்டு நம்மைப் பூசித்து, விலங்குகளின் ஊனை நமக்கு நிவேதிப்பாய்; அக்

காசியில் உனக்கு முத்திதருவோம்." என்று திருவாய் மலர்ந்தருளினார் என்பது சீகாளத்திப் புராணத்திற் கூறப்பட்டது.

ஈசனது நாமங்கேட்டபோதே தன் வசமழியுந் தலையன்புடைய இந்நாயனார்க்குச் சிவலிங்கப்பெருமானைக் கண்டபோதும் கட்டித் தழுவியபோதும் உள்ளத்து மிக்கெழுந்த அதி தீவிரமாகிய அன்பின்பெருக்கை இத்துணைத்தென்று அக்காளத்தியப்பரேயறிய வால்லால் வேறியாவர் அறியவல்லார்? இவ்வற்புதத் தலையன்புடைமையாலன்றோ இக்கண்ணப்பர் சிவலிங்கப்பெருமானைத் தரிசித்துத் தொண்டு பூண்ட நாள்முதல் முத்தியடையும் வரையில் ஆறுதினமாக இரவும் பகலும் ஊண் உறக்கமின்றி யனங்களித்திருந்து கண்பெயர்த்தப்பும்போது,

"மதர்த்தெழு முள்ளத்தோடு மகிழ்ந்துமுன் னிருந்து தங்கண்
முதற்சர மடுதது வாங்கி முதல்வர்தங் கண்ணிலப்ப."

"நின்றசெங் குருதிகண்டார் நிலத்தினின் றெறப்பாய்ந்தார்
குன்றென வளர்ந்த தோள்கள் கொட்டினார் கூத்து மாடி
நன்றுநான் செய்த விந்த மதியென நகையுந் தோன்ற
வொன்றிய களிப்பி னாலே யுன்மத்தர் போல மிக்கார்."

என்றபடி களிதூங்கினார். பின்னர் மற்றைக்கண்ணினும் உதிரமொழுகும்போது,

"உண்ணிறை விருப்பி னோடு பொருதனிப் பகழி கொண்டு
திண்ணனார் கண்ணி லூன்றத் தரித்திலர் தேவ தேவர்."

என்றபடி மகிழ்வுடனே கண்ணிற் கணையை நாட்டினர். இவரது அரிய அற்புதச் செயலை நினைதொறும் நினைதொறும் கன்னெஞ்சமுங் கரைந்துருகுமே!

சிவபிரானுக்கு மாமிசம் நிவேதித்தலும், வாயிற்கொண்டுவந்த நீரான்மஞ்சனம் செய்வித்தலும், காற்செருப்பாற் றிருமுடியிலுள்ள நிருமாலியம் நீக்கலும், தலையிற்சூட்டிய மலர்களைச் சாத்துதலும், ஆகிய இவைகளைப் பிறர்செய்ய நினைக்கினும் எண்ணிறந்த காலம் மிகக் கொடிய நரகத்துன்பமடைவாரன்றோ? அங்ஙனமாக, இக்கண்ணப்பர் இவற்றைச் செய்தமையென்னையெனின், இவர் இப்பிறப்பிலே ஓர் ஆசாரியரை யடைந்து இது புண்ணியம் இது பாவம் இது செயற்பாலது இது ஒழிதற்பாலது என்று ஒரு காலும் கேட்டும் அறியார். தாம் சிவபெருமானைக்கண்டபோது நீர் விட்டு மல

ரிட்டு இருக்கக் கண்டமையானும், ஒரு பார்ப்பான் எதையோ கொண்டுவந்து ஊட்டினான் என்று தம்முடன் வந்த வேடன் கூறக் கேட்டமையாலும் இவையே சுவாமிக்கு உவப்பானவையென்று துணிந்து, அவ்வாறு செய்ய நினைந்து, தமக்கு இனியதாயது மாமிசமேயாதலால், அதுவே சுவாமிக்கும் இனியதாமென்றுன்னி ஊட்டினர்; வாய்நீராட்டி மலருஞ் சூட்டினர். பேய்பிடிக்கப்பட்டாரது செயலெல்லாம் பேயின் செயலாதல் போல, பசுபோதம் அற்றுச் சிவபோதம் உற்ற இந்நாயனாரது செயலெல்லாம் சிவனார் செயலென்றே தெளிக.

பரமேசுரனார் திருக்கண்ணில் உதிரங் கண்டபோது இவர்க்குண்டான பதைப்பும், தமது கண்ணைத்தாமே யிடக்கும்போது சிறிதேனும வருத்தந் தோன்றாமையும், தமது கண்ணைச்சிவனார் விழியிலப்ப உதிரநின்றமை கண்டெழுந்த ஆனந்த மிகுதியும், மற்றைக்கண்ணினும் உதிரம் வடியக்கண்டு இன்னொருகண்ணை இடக்கும்போது சுவாமி கண்ணினுதிரம் இனியொரறென்ற துணிவினாற் பிறந்தவிருப்பமும் இக்கண்ணப்பர்க்குச் சிவபிரானிடத்துள்ள அன்பே இன்பமாயிருந்த தென்பதைத் தெளிவிக்கின்றன. "அன்பினாலடியே னாவியோ டாக்கை யானந்த மாய்க்கசிந் துருக" எனவும், "முடிவிலா வின்பமான அன்பினை யெடுத்துக்காட்ட" எனவும், "இறவாத வின்ப வன்புவேண்டி" எனவும வருகின்ற அருமைத் திருவாக்குக்கள் இங்கே சிந்திக்கற்பாலன.

இதுகாறுங் கூறியவாற்றால் அன்பு இன்னதென்பதும், சிவபிரானிடத்து அன்புடைமைக்கு அடையாளம் இன்னவையென்பதும், அன்புடையார்க்கன்றி மற்றையோர்க்கு அரனருளாரென்பதும், அன்பு மூவகையிற் றலையன்பர் இக்கண்ணப்பநாயனார் என்பதும், அவர்க்கு அன்பே இன்பமாக இருந்ததென்பதும் போந்தமையுணர்க.

வெண்பா.

தத்தையாந் தாய்தந்தை நாகனாந் தன்பிறப்புப்
பொத்தபி நாட்டுடுப்பூர் வேடுவனாந் — இத்திக்குந்
திண்ணபப னாஞ்சிறுபேர் செய்தவத்தாற் காளத்திக்
கண்ணப்ப னாய்நின்றான் காண். (பதினோராந்திருமுறை-நக்கீரர்.)

கண்ணப்பநாயனுரைக் குறித்து முன்னை முதறிஞர்கள் மொழிந்துள்ள பாக்கள் பலவுள. அவற்றுள், மிகமுக்கியமான சிலகவிகள் கற்போர் யாவர்க்கும் கண்டுவக்குமாறு ஈண்டுத் தந்துகாட்டப்படுகின்றன.

மாணிக்கவாசகசுவாமிகள் திருவாசகம்.

திருச்சிற்றம்பலம்.

கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
வண்ணப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்களிற்றுப்படியார்.

கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக் - கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்
றாரறிய வல்லா ரது.

நக்கீரதேவநாயனுரருளிய திருக்கண்ணப்பதேவர் திருமறம்.

திருக்கண் ணப்பன் செய்தவத் திறத்து
விருப்புடைத் தம்ம விரிகட லுலகே பிறந்தது
தேனமர்ந்த துறுகா னவர் குலத்தே திரிவது
மொருபுலி குழுமும் பொருப்புடைக் காடே வளர்ப்பது
செங்க ணுமொடு தீவகம் பலவே பயில்வது
வெந்திறற் சிலையொடு வேல்வா ண்முதலிய
வந்தமில் படைக்கல மவையே யுறைவது
... ... ... ... ... ...
கனவிலா தரிக்கு மந்தண ன்றனக்குச்
சீரார் திருக்கா ளத்தியு ளப்பன்
... ... ... ... ... ...
திருவுருக் காட்டி யருளிப்
புரிவொடு பூசனை செய்யும்
குனிசிலை வேடன் குணமவை யாவன
உரிமையிற் சிறந்தநன் பாதவ னென்றுணர்
அவனுக் கியங்கிய விடமுனி வனமது வேயவன

## கண்ணப்பரைக் குறித்த சிலபாடல்கள்.

செருப்படி யாவன விருப்புறு துவலை
யெழிலவன் வாயது தூயபொற் குடமே
யதனிற் றங்குநீர் கங்கையின் புனலே
புனற்கிடு மாமணி யவனிரைப் பல்லே
யதற்கிடு தூமல ரவனது நாவே
யப்புனல் விழுபொழு தரிஞ்சிய மீசைப்
புன்மயிர் குசையினு நம்மடிக் கினிதே யவன்றலை
தங்கிய சருகிலை தருப்பையிற் பொதிந்த
வங்குலி கற்பத் தலமே யவனுகந்
திட்ட விறைச்சி யெனக்குநன் மாதவ
ரிட்ட நெய்பா லவியே
யிதுவெனக் குணக்கவன்
கலந்தமேதா யன்பு காட்டுவ னாளை

... ... ... ... ... ...

தக்கண மருந்துகள் பிழிபவும் பிழிதொறு
நெக்கிழி குருதியைக் கண்டுநிலை தளர்ந்தென்
அத்தனுக் கடுத்ததெ னத்தனுக் கடுத்ததென் னென்
றன்பொடுங் கனற்றி
யித்தனை தரிக்கில னிதுதனைக் கண்டவென்
கண்ணை யிடந்து கடவுடன் கண்ணுறு
புண்ணி லப்பியுங் காண்ப னென்றொரு கண்ணிடைக்
கணையது மடுத்துக் கையில் வாங்கி
யணைதர வப்பின னப்பலுங் குருதி
நிற்பதொத் துருப்பெறக் கண்டுநெஞ் சுகந்து
மற்றைக் கண்ணினும் வடிக்கணை மடுத்தனன் மடுத்தலும்
நில்லுகண் ணப்ப நில்லுகண் ணப்பவென்
அன்புடைத் தோன்ற னில்லுகண் ணப்பவென்
றின்னுரை யதனொடு மெழிற்சிவ லிங்கந்
தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையா
லன்னவன் றன்கையழு பொடுமெகப் படப்பிடித்
தருளின னருளலும்
விண்மிசை வானவர்
மலர்மழை பொழிந்தனர்
துந்துபி கறங்கின தொலைசீர் முனிவரு
மேத்தின ரின்னிசை வல்லே
சிவகதி பெற்றனன் றிருக்கண் ணப்பனே.

**கல்லாடதேவநாயனாரருளிய திருக்கண்ணப்பதேவர் திருமறம்.**

பரிவின் றன்மை யுருவுகொண் டனையவன்
போழ்வார் போர்த்த தாழுகச் செருப்பினன்

... ... ... ... ... ...

கோசரிக் கன்றவ னேசங் காட்ட
முக்க ணப்பனுக் கொருகணி லுதிரம்
தக்கி ணத்திடை யிழிதர வக்கணம்
அழுது விழுந்து கொழுதெழுந் தாற்றிப்
புண்மருந் தாற்றப் போகா தென்று
தன்னை மருந்தென்று மலர்க்க ணப்ப
வொழிந்தது மற்றை யொண்டிரு நயனம்
பொழிந்த கண்ணீர்க் கலுழி பொங்க
வறற தென்று மற்றக் கண்ணையும்
பகழித் தலையா லகழ வாண்டகை
யொருகை யாலு மிருகை பிடித்து
வொல்லை நம்புண் ணொழிந்தது பாராய்
நல்லை நல்லை யெனப்பெறு
திருவேட் டுவர்தந் திருவடி கைதொழக்
கருவேட் டுழல்வினைக் காரியங் கெடுமே.

**கல்லாடம் - கஅ.**

"முன்னொரு காலத் தடுகொலைக் கணைந்த
முகி லுருப பெறுமோர் கொடுமாக் கிராதன்

... ... ... ... ... ...

வெள்வாய் குதட்டிய விழுதுடைக் கருந்தடி
வைத்தமை யாமுன் மகிழ்ந்தமு துண்டவன்
மிச்சி லுக்கின்னு மிச்சைசெய் பெருமான்."

**பட்டணத்துப்பிள்ளையார்.**

வாளான் மகவரிந் தூட்டவல் லேனல்லன் மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனல்லன் றொண்டுசெய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனல்ல னானினிச்சென்
றாளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பருக்கே.

# கண்ணப்பரைக் குறித்த சிலபாடல்கள்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம்.

காணவர்தங் குலமுலகு போற்ற வந்த
கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத் தோய
மானவரிச் சிலைவேட்டை யாடுங் கானும்
வான்மறைய நிறைபெரிய மாமுந் தூறு
மேனாயிமை யோர்தாழு மிறைஞ்சி யேத்தி
யெய்தவரும் பெருமையவா மெண்ணி லாத
தானமுமற் றவைகடந்து திருக்கா ளத்தி
சாரவெழுந் தருளினார் சண்பை வேந்தர்.

தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே
தடஞ்சிலா தலசோபா னத்தா லேறி
வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள் வாயில்
மருங்கிறைஞ்சி யுட்புகுந்து வளர்பொற் கோயில்
சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தி
தொழுதுதலை மேற்செங்கை கொண்டு போற்றி
வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல்
மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்.

உளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை
யுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும்
வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண்
விமலனையு முடன்கண்ட விருப்பம் பொங்கிப்
பள்ளத்தி லிழிபுனல்போற் பரந்து செல்லப்
பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்த செம்பொன்
வள்ளத்தின் ஞானவா ரமுத முண்டார்
மகிழ்ந்தெழுந்து பன்முறையும் வணங்குகின்றார்.

## திருநாவுக்கரசுநாயனார் புராணம்.

மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதஞ் சேர்ந்திறைஞ்சி
யலைத்துவிழுங் கண்ணருவி யாகத்துப் பாய்ந்திழியத்
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம் போந்தணைந்தார்.

## ஏயர்கோன்கலிக்காமநாயனார் புராணம்.

(சுந்தரமூர்த்திநாயனார் சரித்திரம்.)

வணங்கி யுள்ளங் களிகூர மகிழ்ந்து போற்றி மதுரவிசை
யணங்கு செண்டா டெனும்பதிகம் பாடி யன்பிற் கண்ணப்பர்
மணங்கொண் மலர்ச்சே வடிபணிந்து வாழ்ந்து போந்து மன்னுபதி
யிணங்கு தொண்ட ருடன்கெழுமி யின்புற் றிருந்து மந்நாளில்.

### திருவேங்கைக் கலம்பகம்.

காணும லயன்றேடு நின்மு டிக்கட்
கண்ணப்பன் றொடுகழற்கால வைத்த போதிற்
கோணுக முரிந்ததுவோ குளிர்வெண் டிங்கட்
கொழுந்துபொரு தொதுங்கிற்றோ நீர்ப்பெ ணன்பு
பூணும லருவருத்து நோக்கி னுள்கொல்
பொன்னிதழித் தொடையல்சூழ்ந் திழுத்த தோசொல்
வீணுள்பட் டழியாத வன்பர்க் கன்பாம்
விமலனே வெங்கைவரு மமர ரேறே.

### குறுங்கழிநெடில்.

ஆடுற வடியேன் புதுக்குடந் தருநீ ரன்பன்வாய்ப் புனலுனக்காமோ
கூடையின்மலர்பித்தையிற்றரு மலரோ கூறுமென் கவியவன்மொழி
நாட்ருமொருநீயிறையெனும்வழக்கைஞானசம்பந்தனுற்றிட்ட [யோ
வேடுவை செய்ய வெண்காத் திருக்கு மீசனே மாசிலா மணியே.

### திருக்காளத்திநாதருலா.

"தூயவிழி யப்பியிடச் சோரிபோய் மற்றைவிழி
பாய வலனுங்கண் பாய்ச்சமுன் - வாய்திறந்து
கண்ணப்பா வென்றுருகிக் கண்டமறை யோனுடனே
வண்ணப்பா தங்கொடுத்து வாழ்வித்தோன்."

### திருக்காளத்திநாதர் இட்டகாமியமாலை.

கருமங் கவஞ்சற் றறியாத வேடுவன் றன்செருப்பு
மருமுந்து வேணிக் கணிமா மலரவன் வாயுதகந்
திருமஞ் சனப்புனல் பல்லா லவன்மென்று நின்றதசை
யருமந்த போனக மன்றோநங் காளத்தி யப்பருக்கே.

### திருக்காளத்திநாதர் கட்டளைக்கலிப்பா.

விண்ணப் பஞ்சிறி யேன்மாற்ற மற்றமீ
தொன்று மில்லைவெங் கூற்றுவன் சீற்றமே
பண்ணப் பங்கம் வருமுன்ன முன்னிரு
பாதப் பங்கயப் பாக்கியம வேண்டுமா
லுண்ணப் பங்குசெய் தூன்சுவை பார்த்தவற்
றெவ்வொன் றுமெடுத் துண்ணுமென் றேயன்று
கண்ணப் பன்றா வாயூறி நின்றகங்
காத ராதிருக் காளத்தி வாணனே.

## கண்ணப்பர் பதிகம்

(கண்ணப்பர் கலம்பக நூலாசிரியரால் இயற்றப்பட்டது.

சீருற்ற காளத்தி மலைமருந் தருள்பெறுந்
திருநெறித் துறைசீர்பெறத்
திசைமுற்று மறவர்க்கெ லாந்தவத் தான்மிகு
சிறப்பிற் பிறப்புரிமைகொண்
டேருற் றிலங்கிடப் பொத்தப்பி நாட்டினி
லியம்புடுப் பூர்நாகனு
மிறவுளர்க் கிறைவன்மகிழ் நிறையுளத் தத்தையா
மியன்மனைவி மணிவயிறுவாய்த்
தாருற்ற சூர்ப்பகைக் குமரனரு ளான்முன்ன
ரவதரித் தேதிண்ணனு
மணிநாம நணிவாம மணிபோல வெளியாரு
மன்புசெய வின்பமுடனே
காருற்ற வடிவுகொண் டடலேற னத்திறல்கொள்
காளையாய்த் தொண்டியற்றிக்
கண்ணைப் பறித்துமணி கண்டர்க்கு முன்னமணி
கண்ணப்ப னேகண்மணியே.

## தனிப்பாடல்

மருப்படிக்கொண் டெழுமுலையா ரெண்ணிறந்தார்
வயிற்புக்கு வருந்து நெஞ்சே
கருப்படிக்கா லருந்திலெனக் களித்தெழுபே
ரன்பினொடும் கவின்கா ளத்திப்
பொருப்படிக்கீழ்க் கண்ணப்ப ருள்வேட்டம்
புரிகாற்பொன் னடியிற் பூண்ட
செருப்படிக்கீழ்ச் சிறுமணலாய்க் கிடவாத
தீவினைக்கென் செய்கு வோமே.

சோரத வேடன் செருப்பா லடிக்கவுந் தீண்டவுந்தன்
னீர்வா யுமிழவு முச்சிட்டம் போடவு நீண்டசிலைத்
தாரா லடிக்கவுங் கண்ணீர் ததும்பவுந் தாய்தமர்க
ளாரா கிலுமில்லை யோதிருக் காளத்தி யப்பனுக்கே.